## அட்டைப் படம்

சர்க்காருக்கு உறைவிடமாக விளங்குபவர்களில் இன்று மகாத்மாஜிக்கு அடுத்தபடியாகச் சொல்லக்கூடியவர்கள் யாரேனும் உண்டென்றால் அவர் ராஜேந்திர பிரஸாதைத் தவிர வேறில்லை. உடல், பொருள், ஆவி அவ்வளவையும் இந்தியாவின் விடுதலைக்காக அர்ப்பணம் செய்த சீலர் அவர். இவ்வார இதழின் அட்டையை அலங்கரிப்பது அவரது படம்தான்.

சிறந்த படிப்பாளி; கல்வி சம்பந்தமான பிரச்னைகளில் தீவிர சிரத்தை கொண்டவர். அநேக வருஷங்கள் பாட்னா சர்வகலாசாலை ஸெனட்டில் அங்கத்தினராயிருந்தார். "பீஹார் வித்யாபீடத்"தின் உபஅத்யட்சகராயிருந்தவர், பாட்னா சட்ட வாரப்பதிப்பை ஸ்தாபித்தவர்.

1884-ம் வருஷம் டிஸம்பர் மாதம் 3-ந் தேதி ராஜன் பாபு பிறந்தார். எம். ஏ., எம். எல்., எல். எல். டி., பட்டங்கள் பெற்றவர். 1914-ம் வருஷம் முதல் 1916-ம் ஆண்டு வரையில் கல்கத்தா சர்வகலாசாலை சட்டக் காலேஜில் புரொபஸராயிருந்தார். சட்ட மறுப்பு இயக்கம் துவங்கியபோது தம் தொழிலை விட்டார். அநேகம் தடவை சிறை சென்றிருக்கிறார்.

காங்கிரஸ் காரியக் கமிட்டியில் அங்கத்தினர். காங்கிரஸ் அக்கிராசனராயிருந்தும் தேசத்துக்கு வழி காட்டியிருக்கிறார். 1934-ம் வருஷத்தில் பீஹாரில் ஏற்பட்ட பூகம்பச் சேதத்தின்போது ராஜன்பாபு செய்த நிவாரண வேலை மகோன்னதமானது. தவெட்டா பூகம்பத்தின் போதும் அவர் தொண்டு பெரிதும் பயன்பட்டது.

இன்று இடைக்கால தேசிய சர்க்காரில் உணவு இலாகா மெம்பராகப் பதவி வகிக்கிறார். நாட்டினர் கஷ்டங்களை நேருக்கு நேராகத் தெரிந்து கொண்டுள்ள இந்த சிரேஷ்டரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கும் இலாகா மிகப் பொருத்தம். அவர் நிர்வாகத்தில் நிவாரணம் கிட்டுவது திண்ணம். டாக்டர் பிரஸாத் தென்னிந்திய உணவு நிலைமையைக் காண நேரில் வரத் திட்டமிட்டிருந்தார். ஆனால் அவர் டில்லியை விட்டு இப்போது வெளிக் கிளம்புவது சாத்தியமில்லை. காரணம் தெளிவு.

### திருத்தம்

இவ்விதழின் கடைசி பக்கத்தில் கீழ் இடப்புறத்தில் தோன்றும் படத்தைப்பற்றிய வரிகளில் "மேற்படி மகாநாடு" என்பதை சென்னை மாகாண ஜவுளி வியாபாரிகள் மகாநாடு என்று திருத்தி வாசிக்கவும்.

உங்கள் காலபலன்
பக்கம் 24

# சுதேசமித்திரன்

வாரப் பதிப்பு

மஹாபாரத ஸாரம்
பக்கம் 29



வியஹு புரட்டாசி மீ 27௨ ★ 1946ளு அக்டோபர் மீ 13௨


## உலகம் சிரிக்கும்!

ஜன்மத்தோடு பிறந்தகுணம் என்ன செய்தாலும் மறையாது. மீண்டும், மீண்டும் அது துளிர்விடத்தான் செய்யும். இதற்குச் சிறந்த உதாரணம் வேண்டுமானால் பிரிட்டிஷ் கன்ஸர்வேடிவ்களின் சமாஜத்தின் போக்கைக்கவனித்தாலே போதும். சமீபத்தில் கன்ஸர்வேடிவ்கள் லண்டனில் ஓர் மகாநாட்டை நடத்தினர். சர்ச்சில் துரை அம்மகாநாட்டில் ரத்தக்கண்ணீர் வடித்திருக்கிறார். அக்கண்ணீரில் தோய்த்து எழுதப்பட்டதேபோல இந்தியா பற்றி அம்மகாநாட்டில் ஓர் தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. இந்தியர்களிடம் இந்தியா ஒப்படைக்கப்படும் தருணம் வந்துவிட்டதே என்ற ஏக்கத்தின் எதிரொலியைத்தான் நாம் அத்தீர்மானத்தில் காண்கிறோம்.

கன்ஸர்வேடிவ் கட்சிக்குப் பிரிட்டிஷ் தேர்தலில் விழுந்த சூடு சாமான்யமானதல்ல. ஆனால் அச்சூடு ஓரளவேனும் உறைத்திருக்குமானால் சாம்ராஜ்ய வெறி தணிந்திருக்கலாம். "இருநூற்றுண்டுகளாகச் சேகரித்த மகோன்னதமான சாம்ராஜ்யத்தை இப்படியா சிதறடிப்பது!" என்று மனம் வெதும்பியிருக்கிறார் சர்ச்சில். ஆசிய மக்கள் விழிப்புற்றுவிட்டனர்; அந்நியர் தலையில் அவர்கள் அரைக்கணங்கூட சிக்கி வாழ இணங்கப் போவதில்லை. கால நிலையில் காணும் மாறுதலே அதற்குச்சான்று. இதை உணர்ந்திருந்தால் கன்ஸர்வேடிவ்களுக்குக் கலக்கம் தெளிந்திருக்கும். அவர்கள் கண்களை விற்றுவிட்டுச்சித்திரம் வாங்க விரும்புகின்றனர்!

தீர்மானத்தில் காணப்படும் கருத்து படு விசித்திரம். இந்தியப்பிரச்னையை முடிவு பண்ணும் எத்தகைய ஏற்பாடாயிருந்தாலும் அதில் மைனாரிட்டிகள், சமஸ்தானங்கள் இவற்றின் க்ஷேமலாபங்களையும், உரிமைகளையும் பத்திரப்படுத்திப் பந்தோபஸ்து செய்ய வேண்டுமாம்! ஒரு புறம் இந்தியாவில் பிளவை அகலப்படுத்திக் கொண்டேயிருப்பதும், இன்னொரு பக்கத்தில் சுய நலக்சூறையாட்டத்துக்கு உதவி அளிப்பதும்தான் இதன் உட்கருத்து. இது எவ்வளவு அசட்டுத்தனம் என்பதை மிஸ்டர் ரீட் அறிவுறுத்த முயன்றார். காங்கிரஸைத் தாக்கி சிலர் மகாநாட்டில் பேசியதற்கும் அவர் பதில் அளித்தார். சுயேச்சை, ஜனநாயகம் இவை இரண்டும்தான் இந்தியக்காங்கிரஸின் அடிப்படைக் கொள்கை என்பதை, இந்நாட்டில் நேரில் இருந்து கண்ட மிஸ்டர் ரீட்டின் பேச்சைக் கேட்டு சில கன்ஸர்வேடிவ்கள் ஆட்சேபத்துக்கறிகுறியாகக் கொக்கரித்தனராம்!

எந்த விதத்திலாவது சாம்ராஜ்யம் கைநழுவிப்போகாமல் இருந்தால் போதும் என்பது தான் காலப்போக்கை அறியாத கன்ஸர்வேடிவ்களின் நோக்கம். விண்டர்டன் பிரபு என்பவர் பேச்சில் அவ்விஷமத்தைக் காணலாம். இந்தியாவில் மூளும் கலகங்களைச் சமாளிக்கப் பிரிட்டிஷ் துருப்புகளைப் பயன்படுத்திக்கொள்வதுதான் பண்டித ஜவஹர் தலைமையில் அமைந்த சர்க்காரின் உத்தேசம் என்று அவர் கூறினார். பண்டித ஜவாஹர் இதை வளரவிடாமல்உடனேயேஒட்ட நறுக்கிப் பதில்கொடுத்துள்ளார். பிரிட்டிஷ்துருப்புகள் இந்தக்கணமே வாபஸாகட்டும் என்று அவர் தந்துள்ள பதில் சர்ச்சில் சமாஜத்துக்கு ஆயிரம் தேள்கள் ஏககாலத்தில் கொட்டினாற் போலிருக்குமென்பதில் சந்தேகமில்லை. கன்ஸர்வேடிவ்களின் நோக்கம் இன்னதென்பது இந்தியர்கள் ஏற்கனவே அறிந்ததுதான். பிரிட்டிஷ் வாக்காளர்களுக்கும் இது தெரிந்திருக்கிறதென்பதைச் சென்ற பிரிட்டிஷ் தேர்தல்களின் முடிவு நிரூபித்திருக்கிறது. இவ்வளவுக்குப் பிறகும் நல்ல மார்க்கம் தெரியாது போனதுகண்டுதான் இந்நாடு சிரிக்கிறது; ஏன் உலகமேதான் சிரிக்கும்!

# பிரிட்டனுக்கு அணுகுண்டு ஸப்ளை

"அமெரிக்கா பிரிட்டனுக்கு அணுகுண்டுகள் அனுப்பிவைத்திருக்கிறது. திடீரென்று ஏற்படக்கூடிய சர்வதேச நெருக்கடியைச் சமாளிக்கும்பொருட்டே இங்கிலாந்தில் தற்போது அத்தகைய குண்டுகள் தயாராகத் திரட்டி வைக்கப்படுகின்றன'' என்று பிரபல அமெரிக்க நிருபரான டிரூபியர்ஸன் அறிவிக்கிறார்.

இந்த அறிக்கையைப்பற்றி அமெரிக்க அதிகாரிகளை விசாரித்தபோது அவர்கள் முதலில் தங்களுக்கு ஒன்றும் தெரியாதென்று சொல்லிவிட்டார்கள். ஆனால் அமெரிக்க யுத்த மந்திரி பிறகு விடுத்த அறிக்கையொன்று டிரூபியர்ஸன் வெளியிட்ட தகவல் உண்மையல்லவென்று கூறுகிறது.

## நாஸித் தலைவர்கள் கதி

யுத்தம் துவக்கியதற்காகவும், மனித வர்க்கத்தை பயங்கரக் கொடுமைகளுக்குட்படுத்தியதற்காகவும் நேச தேச கோர்ட்டால் விசாரிக்கப்பட்ட நாஸித் தலைவர்களில் 12 பேர் தூக்கு தண்டனை விதிக்கப்பட்டனர். இதையொட்டி கோயரிங், கீடல் முதலியவர்கள் இம்மாதம் 16-ந் தேதி தூக்கிடப்படுவர். ஆயுள் சிறைவாச தண்டனை பெற்றவர்களில் ஒருவரான ரீடர் தமக்கு வயதாகி தேகம் தளர்ந்து விட்டதால் சிறைவாசக் கஷ்டங்களை தாம் சகிப்பதற்கில்லையென்றும் எனவே தம்மை இப்போதே சுட்டுக்கொன்று விடுமாறும் நேச அதிகாரிகளுக்கு விண்ணப்பித்துக்கொண்டிருக்கிறார். ஷாட், வான்பேன், ஷரீசர் இம்மூன்று நாஸித்தலைவர்கள்நேச தேச கோர்ட்டால் விடுதலை செய்யப்பட்டனராயினும், அவர்கள்மீது மீண்டும் ஜெர்மன் கோர்ட்டுகளில் வழக்குத் தொடுக்கப்படலாம்.

யுத்தம் தொடுத்ததற்காக இதுவரை எந்த சர்க்காரும் கூண்டிலேற்றப்பட்டதில்லையென்றும், இப்பொழுது இதை ஒரு கடுங் குற்றமாக்கி இதற்காக நாஸித் தலைவர்களைச் சிட்சிப்பது நியாயமல்லவென்றும் பல தேசப் பிரமுகர்கள் வற்புறுத்துகின்றனர்.

## யூதர் நலத்தில் ட்ருமென் சிரத்தை

உடனேயே பெருவாரியான யூதர்களை பாலஸ்தீனத்தில் குடியேற்ற வசதி அளிக்க வேண்டுமென்று அமெரிக்க ஜனாதிபதி டிருமென் ஒரு அறிக்கை விடுத்துள்ளார். பாலஸ்தீனப் பிரச்னைபற்றி ஏற்கனவே லண்டனில் ஒரு மகாநாடு கூடியதும், பிரச்னையின் சிக்கல் காரணமாக அது ஒத்திவைக்கப்பட்டதும் நேயர்களுக்கு ஞாபகமிருக்கும். அமெரிக்க ஜனாதிபதியின் அறிக்கை அப்பிரச்னையை இன்னும் சிக்கலாக்குவதாகும். அமெரிக்காவில் வரும் நவம்பர் மாதத்தில் காங்கிரஸுக்குத் தேர்தல் நடைபெறவிருக்கிறது. அதில் தமது கட்சிக்கு யூதர்களது வோட்டுகளைப் பெறும் பொருட்டே டிருமன் இத்தகைய ஒரு அறிக்கையை வெளியிட்டிருப்பதாகக் கருதப்படுகிறது. ஆனால் பாலஸ்தீனத்தில் யூதர்.கையை வலுப்படுத்துவதில் அமெரிக்க அதிகாரிகள் நெடுநாளாகவே அக்கரை காட்டிவந்திருக்கின்றனர். வர வர அங்கு யூதர் தொகையைப் பெருக்கி இதன் மூலம் மத்தியக் கிழக்கில் தங்கள் செல்வாக்கை வளர்த்துக்கொள்வதே அமெரிக்க சர்க்காரின் நோக்கம், ஏற்கனவே பாலஸ்தீனத்தில் யூதரது ஜனத்தொகையும் பாத்தியதைகளும் பெருகி வருவது கண்டு கிளர்ச்சி செய்யும் அராபியர் அமெரிக்க ஜனாதிபதியின் யோசனையை ஆத்திரத்துடன் எதிர்ப்பது இயற்கையே யூதர்களுக்குத் தங்குமிடம் அளிப்பதே அமெரிக்க அதிகாரிகளது கருத்தானால், அவர்களைக் குடியேற்ற அமெரிக்கா, ஆஸ்திரேலியா ஆகிய கண்டங்களில் காலிப் பிரதேசம் பெருவாரியாக இருக்கிறது. ஆனால் அதையெல்லாம் விட்டு யூதர்களை மேன்மேலும் பாலஸ்தீனத்திலேயே திணிப்பதில் அமெரிக்கர் பிடிவாதம் காட்டுவது அரசியல் நோக்கத்துடன்தான் என்றே எண்ண வேண்டியிருக்கிறது.

## முஸ்லீம் தலைவர் உபதேசம்

தென்னாப்பிரிக்காவில் இந்தியரை ஒடுக்குவதற்கான சட்டங்கள் அமுலுக்கு வந்திருப்பதை முன்னிட்டு அவர்கள் தொடர்ந்து சாத்வீக எதிர்ப்பு முறையைக் கையாண்டு வருகின்றனர். இது பற்றி டிரான்ஸ்வால் முஸ்லிம் லீக் தலைவரான ஜனாப் எம். ஏ. தினாத் முஸ்லிம்கள் மகாநாட்டில் பேசுகையில் எத்தகைய காரணத்தை முன்னிட்டும் இங்குள்ள ஹிந்து-முஸ்லீம்கள் பிளவுபடக்கூடாதென்று வற்புறுத்தினார். பிளவுபடுவது இந்தியர்களின் தற்கொலைக்கு ஒப்பாகுமென்றும் அவர் சுட்டிக் காட்டினார். தென்னாப்பிரிக்க வெள்ளையரின் நிறத்திமிரிலிருந்து பிறந்த நடவடிக்கைகளைப் பற்றி இந்தியா ஐக்கிய தேச அஸெம்பிளியிடம் புகார் செய்துகொண்டிருக்கிறது. இவ்விஷயத்தில் இந்தியாவின் கட்சியை ஆதரிக்கும்படி அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் அந்நிய விவகாரக் காரியதரிசியான ஸ்ரீ சத்திய சரண் சினா, துருக்கி, இராக் முதலிய நாடுகளின் பிரதிநிதிகளுக்கு ஒரு கோரிக்கை விடுத்துள்ளார்.

## கள்ள மார்க்கெட் ஆசாமிகளுக்கு மரண தண்டனை

பிரான்ஸில் கள்ள மார்க்கட்காரர்களுக்குக் கடுந் தண்டனை விதிக்கும் முறையில் பிரஞ்சு அரசியல் நிர்ணய சபையில் ஒரு சட்டம் நிறைவேறியிருக்கிறது. இதன்படி திருட்டு ரேஷன் கார்டுகளை அல்லது பொய்க் கையெழுத்திட்ட ரேஷன் கார்டுகளை உபயோகிப்பவர்களுக்கும், பொது சுகாதாரத்துக்குக் கேடான பொருள்களை விற்போருக்கும், சாமான்களை கள்ளத்தனமாக அதிக விலைக்கு விற்போருக்கும் அதிக விலை பெறும்பொருட்டு உணவுப்பொருளை முடக்கிவைப்பவர்களுக்கும் மரண தண்டனை விதிக்கப்படும்.

# கண்ணம்மாவின் பாசம்

"ஆத்ரேயன்"

துரோணாசாரியரின் பிள்ளை அசுவத்தாமாவுக்கு மாடு திருடுவழக்கில் ஒருவருஷம் சிறைவாசம் கிடைத்தது.

கூத்து வாத்தியார் தலைமேல் கைவைத்துக்கொண்டார். என்ன செய்வது? இன்னும் நாலு நாளில் பக்கத்தூர் துரோபதையம்மனுக்குக் காப்புக்கட்டுவார்களே? நாட்டாண்மைக்காரர் தாமே நேரில் வந்து பார்த்து, முன் பணமும் கொடுத்திருக்கிறாரே!—இந்த சமயத்தில் அசுவத்தாமாவுக்கு இந்த மாதிரி விபத்து நேரிட்டால்!

இரண்டுபேர்தான் அந்த வேஷம் போட்டுக் கொள்ளத்தகுந்தவர்கள். ஒருத்தன் தான் சிறைவாசம் செய்கிறான். அந்தத்தெருப் பயல் முருகனைப் போடலாம்—ஆனால் அது ஒரு திருட்டுக்கொட்டு—பிடிவாதம் பிடிக்கும். ஆனால் இந்த நெருக்கடியில் அவனைத்தான் ஒருவாறு இணங்கச் செய்யவேண்டும் அவனை.

கூத்துவாத்தியார் அவனைப் போய்ப்பார்த்தால் "ஐந்து ரூபாய்க்குச் சல்லி குறைஞ்சாலும் நா வர மாட்டேன். நேக்கு வேலையிருக்கு, அண்ணே!" என்றான் முருகன்—அவனுக்கு ஐந்துகொடுத்தால் அவனுடைய அப்பா துரோணாசாரியார், தாத்தா பீஷ்மர், பாண்டவ வீரன் பீமன் இவர்களுக்கு என்ன் கொடுக்கவேண்டியிருக்குமோ?—எப்படியோ காலைப்பிடித்துக் கெஞ்சிக் கூத்தாடி நான்கு ரூபாய்க்கு இணங்கச் செய்தார்.

* * * *

ஆட்டம் ஆரம்பமாயிற்று.

முழ நீள தாடியுடன் துரோணாசாரியார் வந்தார். மேடையின் ஒரு மூலையில் அசுவத்தாமன், "பாலு, பாலு—அப்பா—பாலு குடேன்" என்று காலை உதைத்துக்கொண்டு அழுதான்-துரோணாசாரியார் மேடையெங்கும், வேஷம் போட்டுக் கொள்ளும் அறைக்குள்ளும் போய்ப் பால் தேடினார்—அசுவத்தாமாவின் ஓலம் பலமாக இருந்தது. கடைசியில் துரோணாசாரியார் பின்பாட்டு பாடிக்கொண்டிருந்த தம் சம்ஸாரத்தினிடமிருந்து பாத்திரம் ஒன்



றை வாங்கி அதில் மாவைக் கரைத்தார். அசுவத்தாமா அதைக் குடித்துவிட்டு" நானு பாலு குடிச்சேனே!" என்று மேடையெங்கும் குதித்துக்கூத்தாடினான்.

எல்லாரும், "பலே, ஸபாஷ்" என்று கை தட்டி அவன் நடிப்பை மெச்சினார்கள். கூத்து வாத்தியார் "நல்லா ஆடிட்டானே பயல். நாலு ரூபா கொடுத்தாலும் போவுது. அந்த மட்டும் மானத்தைக் காப்பாத்தினானே! அதுவே போரும்" என்று சொல்லிக்கொண்டார்.

* * * *

ஒரு மூலையில் பெண் ஒருத்தி கண்களைத் துடைத்துக்கொண்டிருந்தாள் புடவைத் தலைப்பினால். நாட்டாண்மைக்காரரின் மூத்த மருமகள் கண்ணம்மாதான் அவள்—நாடகத்தில் அசுவத்தாமா வேஷம் கட்டியது தன் தம்பிதானோ என்று தோன்றியது அவளுக்கு.

அவள் சின்னவள்-இருந்தாலும் இது நாடகம்; உண்மையல்ல என்று மாத்திரம் அவளுக்குப் புரிந்தது. மெய்யோ, பொய்யோ-அவ்வளவு அழகிய பிள்ளை 'பாலு' என்று அழுதால் அது ஒரு பெண்ணுக்கு அதிலும்தாய்க்குப் பொறுக்குமா?-முட்டாள் பையன் பால் என்று மாவைக்கொடுத்தால் குடித்ததே! அதை வீசி எறியாமல்குடித்ததுமல்லாமல் கூத்தாடியதே!

ஆனால் ஆட்டம் பூராவையும் கவனிக்க அவளுக்கு ஒழிவேது? வீட்டில் குழந்தை விழித்துக் கொண்டிருக்கும். இருட்டியதும் அவனைத் தூங்கப்பண்ணி வேலைக்காரியைப் பார்த்துக்கொள்ளச் சொல்லிவிட்டு வந்தாள்-வேலைக்காரி ஒரு பைத்தியம்—என்ன செய்கிறாளோ!-தூங்கினாலும் தூங்கினாள்-இல்லையோ-கூட்டத்தில் உட்கார்ந்து நிம்மதியாக பாட்டுக் கேட்டுக்கொண்டிருந்தாலும் இருப்பாள். ஒரு வயது குழந்தை-பால் குடிக்கும் வேளை-வீட்டிலோ யாரும் இல்லை விழித்துக் கொண்டதோ அழுகையில் வீட்டை இரண்டாக்கி விடும்-கண்ணம்மா வேண்டாவெறுப்பாக எழுந்தாள்.

ஊரில் பெரிய மனுஷ்யர்களாக ஆறு பேர் சேர்ந்து மஹாபாரத நாடகம் ஏற்பாடு செய்திருந்தார்கள். பக்கத்தூர் ஆட்டக்காரர்களுக்கு ஒவ்வொருவரும் பன்னிரண்டு பேர் வீதம் சாப்பாடு போட வேண்டுமென்று ஒப்புக்கொண்டனர்.

இரவு வெகு நேரம் கழித்துக் கூத்து முடிந்ததும் புருஷர்கள் சாப்பிட்டாயிற்று. அப்புறம் கண்ணம்மா சாப்பிட உட்கார்ந்தாள். "ஆட்டக்காரங்க சாப்பிட்டாங்களோடி!" என்று சமையல்காரியை கேட்டாள்.

"அதென்னம்மா அப்படிக் கேக்கறே! வீட்டுக்காரங்க சாப்பிடறதுக்கு முன்னாலே அவுங்களுக்குப் போடுவாங்களா என்ன! இதோ-பாளயத்தை அனுப்பணும் அவங்களை இட்டாற!-நீ சாப்பிடு அப்பாலே..."

கண்ணம்மா சாப்பிட்டானதும் மேலே மாடிக்குச் செல்ல படிக்கட்டில் காலெடுத்து வைத்தாள். அப்போது பாளயம் மெல்லக் கீழே இறங்கி வந்தாள்.

"ஏண்டீ, கூத்து எப்படியிருந்தது?" கண்ணம்மா கேட்டாள்.

"நான் நாசமாப் போனாப்பலே இருக்குது- நானு எப்போ போனேன் அங்கே!-தலை நோவு கொல்லுது..."

"ஏண்டி, இருட்டிலே நீ போவலையா! நான் பார்த்தேனடி-யாரண்டைச் சொல்லப்போறேன் நீ போனதை?-எதுக்காப் பொய் சொல்றே?-" என்று கண்ணம்மா சிரித்தாள்.

"மொள்ளப் பேசம்மா, அம்மா காதுலே விளுந்துதோ, விடமாட்டாங்க லேசிலே-பீமசேனன் கதையைஎன்னமா சுத்தறான்னு சொன்னாங்க சமையல்காரம்மா எனக்குத்தாங்கலே..."

"அது சரி, அந்த அசுவத்தாமன் எப்படி?" ராஜாமாதிரி இல்லே!"

"ஹூம்-" என்றாள் பாளயம், அவள் மூளைக்குள் பீமனின் கதை

'ரை ரை' என்று சுழன்றது "அந்த பீமசேனன் என்னமா சுத்தினான் கதையை.–அந்த துரியோதனன்தான் என்ன...? லேசுப்பட்டவனா?–ஆமாம்மா, அந்தக் கதை இருபது வீசை இருக்காது?"

அதற்குள் பின் கட்டிலிருந்து, "ஏண்டீ பாளயம் எங்நேரம் காத்திருக்கிறது?–போயேண்டி. போனேன் வந்தேன்னு வா அவங்களை இட்டுக்கினு. நேரமாவிது என்று குரல் வந்தது.

"போடி. வீணா ஏன் பொழுதாக்கறே? அந்த அசுவத்தாமா தெரியுதா? அவனை இங்கே அழைச்சுண்டு வந்துடு. பால் வச்சிருக்குது அவனுக்குக் குடுக்க"–

பாளயம் அவர்களை அழைத்து வர வெளியே சென்றாள். கண்ணம்மா மெல்ல மேலே சென்றாள்.

* * *

அசுவத்தாமாவைக் கண்டது முதல் கண்ணம்மாவுக்குப் பழைய நினைவுகள் எல்லாம் திருப்பித் திருப்பி எழுந்தன.

அரும்பாக்கத்தில் அவளது பிறந்தகம். தாய் தந்தையர் அப்படி ஒன்றும் பணக்காரர்கள் அல்ல. அவளும், அவளுடைய ஒரே தம்பியான சின்னசாமியும் செல்வமாக வளர்ந்தனர். அந்த வறுமையிலும், சின்னசாமிக்கு ஊரார் முட்டாள் என்று பெயர் வைத்திருந்தனர். தனக்கு அப்பா இருக்கிறார் என்பதுகூட அவனுக்குத்தெரியாது-வீணுக்குத் தனக்கு அப்பா இல்லை என்று வாதாடுவான்.

ஊரில் ஏதோ ஒரு வீட்டில் கல்யாணம் நடந்தது விருந்தாளிகள் எல்லாரும் போனபின் வீட்டைச் சோதனை செய்த சின்னான் ஒரு பொருளைக் கையில் ஏந்தி வந்து நின்றான்.

"அக்கா, இதோ பரத்தயா மிட்டாய்.–" என்று அக்காவிடம் அதை எடுத்துக் காட்டினான்.

"போடா, பைத்தியம். அது மெழுகுவத்திடா. ஏத்தினா எரியும்–" கண்ணம்மாவுக்குச் சிரிப்பு வெடித்துக் கொண்டு வந்தது.

"நேக்குத் தெரியாதுன்னா சொல்றே!–இது மெழுகு வத்தியோ,–ஹூம். அன்னிக்கு அந்த மணியக்கார ஊட்டுப் பயல் தின்னானே!–" என்று ஆரம்பித்தான் வாய்ப்போருக்கு.

அவளுக்குப் பன்னிரண்டு வயதிருக்கும்போது பக்கத்து ஊர் நாட்டாண்மைக்காரர் சீராள ரெட்டி அந்த ஊருக்கு ஏதோ வேலையாக வந்தார். கண்ணுவைப் பார்த்ததும் அவருடைய கண்கள் குளிர்ந்து விட்டன. தம் பிள்ளைக்கு ஏற்ற பெண் என்று தீர்மானம் செய்து விட்டார்.

அன்று அவள் தன் தம்பியுடன் ஏரியிலிருந்து நீர் மொண்டு கொண்டு வீடு திரும்பினாள். அந்த வழியாக வந்த சீராள ரெட்டியார், "பாப்பா–இதைக் கேளம்மா–" என்று கூப்பிட்டார்.

கண்ணம்மா கூச்சத்துடன் நின்றாள் என்ன சொல்வதென்று தெரியாமல், அவர் பளிச் சென்று தம் எண்ணத்தை வெளியிட்டார்.

"என் வீட்டுக்கு வரயாம்மா–விளக்கேத்துவே -வரயா–" என்று அவர் காற்றில் அலைபட்டு நெற்றியில் படிந்த கண்ணம்மாவின் கூந்தலை விலக்கினார்.

அவளுக்கு அவர் சொன்னதில் கொஞ்சம் புரிந்தது. ஆனால் அந்த முட்டாள் பயலோ "அவுங்க வீட்டுக்கு நீ ஏன் போவனும், அக்கா? நீ போகாட்டா பிடிச்சுண்டு போயிடுவாங்களான்னா? என்றெல்லாம் கேட்டான்.

கண்ணம்மா ஏழைப் பெண்ணாக இருந்தாலும் அவள் அழகும் அடக்கமும், குணமும் சீராள ரெட்டியைத் திருப்தி செய்து விட்டன. "பணத்தாலென்ன! இன்னிக்கு வரும், நாளைக்குப் போகும்–" என்று அவர் அவளைத் தம் மருமகளாக்கிக்கொண்டார்.

புக்ககம் போவதற்கு முன், "அக்கா, நான் அங்கே வந்தால் அடிச்சு விரட்டு வாங்களான்னா!–எனக்கு மிட்டாய் தருவாயா?" என்று கேட்டான் சின்னசாமி

"நீ சின்னவனாச்சே. இல்லாட்டா உன்னையும் கூடவே அழைச்சிண்டு போவேன். பெரியவனானதும் வரயா? நெறைய மிட்டாய் தரேன்–" என்று கண்ணம்மா அவனைத் தேற்றினாள்.

* * * * *

கண்ணம்மா மேலே சென்று பார்த்தாள். அவள் புருஷன் சீனுவாசன் நாளெல்லாம் உழைத்த களைப்பினால் அயர்ந்து தூங்கினான்–விளக்கைச் சிறியதாக்கி மறைவில் வைத்தாள் கண்ணம்மா-குழந்தை நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தது. மெல்லப் பால்சொம்பை எடுத்துக் கொண்டு கீழே வந்தாள்.

இன்னும் ஆட்டக்காரர்கள் வரவில்லை. "பாரேன் இவள் பண்ணுகிற கூத்தை! அப்போ போனவள் இன்னும் வந்தபாடில்லை." என்றாள் சமையல்காரி.

"நீதான் போனாயே கூத்து பார்க்க? அசுவத்தாமா என்னமா அழுதான்?'

"ஹூம்–அதெல்லாம் எந்த மூலைக்கு? அந்த பீமசேனன் சுத்தினானே கதையை!– அவனுக்கு முன்னாலே எது நிற்கும்?"

"அது சரிதான்—எனக்கென்னமோ அசுவத்தாமாதான் பிடிச்சுது. பாவம்-பாலுன்னு என்னமா அழுதான்!—இதைக் குடுக்கிறயா அவனுக்கு, மறந்து போயிடாதே'

பூனைக்குப் பயந்து அதை மாடத்தில் வாங்கிவைத்தாள்சமையல்காரி. பின்னர் கண்ணம்மா மெல்லச் சொன்னாள்- இன்னிக்கு அசுவத்தாமா வேஷம் கட்டினானே அவனைப் பார்த்தால் என் தம்பிதானோன்று தோணித்து—அவன் பாலுன்னு அழுதானேஎன் தம்பி அழறாப்போ தான் எனக்கு இருந்தது."

"உன் தம்பி இப்படித்தான் இருப்பானோ?"

"ஹூம்—இன்னும் சோப்பா இருப்பான்–தங்கப் பொம்மையாட்டமா! யாரோ சொன்னாங்க, பிரியச்சே விரலைக் கடிச்சா பாசம் விட்டுடும்னு நானும்அப்படித்தான் செஞ்சேன்-அதெல்லாம் ஒரு பேச்சா!"

"ஆமா-நீ அரும்பாக்கம் போயி ரொம்ப நாள் ஆகலே?"

கண்ணம்மாவின் முகம் வாடியது—மூன்று வருஷமாகிறது அவள் போய் "அக்கா, உன் வீட்டுக்கு வந்தா எனக்கு மிட்டாய் தரயா" என்று கேட்ட சின்னானும் வரவில்லை

"ஏனம்மா, அவன் ஏன் வரலை?"

"யாரோடே வருவான்?-பத்து வயசுகூட ரொம்பலையே? பெரியவன் ஆனாத் தன்னாலே வந்து என்னை அழைச்சுக்கிட்டுப் போவான்."

இதே சமயம் மேலே குழந்தை அழ ஆரம்பித்தது. அழுகையா அது!- கொலை பண்ணிவிட்டாப் போலத்தான். "மறந்துடாதே, ஆயா, பால் கொடுக்க" என்று எச்சரித்துவிட்டு மேலே சென்றாள் கண்ணம்மா.

குழந்தை அழ ஆரம்பித்தால் எப்படிடா இவ்வளவு ஓசை அதன் தொண்டைக்குள்ளிருந்து வருகிறது என்று ஆச்சரியப்பட வேண்டியதுதான்.

இதற்குள் சீனுவாசன் எழுந்து விட்டான். "போ—ஒன் கொழந்தையை எடுத்துண்டு தொலை—என்னா கூச்சல் போடுது."—என்றான் வெறுப்புடன்.

குழந்தையை எடுத்துக்கொண்டு வராந்தாவுக்கு வந்தாள் கண்ணம்மா.

இருளில் வானத்தின் மார்பில் லக்ஷக்கணக்கான மணிகள் ஒளிர்ந்தன. மெல்லத் தட்டிக்கொண்டே உலாவியவாறு குழந்தையைத் தேற்றினாள் கண்ணம்மா. 'அழாதேடா-என் செல்லக்கண்ணு! தங்கக்கட்டி! - சமத்தாச்சே!-இன்னிக்கு ஒரு நாள் நோக்குப் பால் இல்லே, போனால் போறது-ஒங்க மாமா வந்தானே! நீ தூங்கிக்கிட்டிருந்தே!-உன் பாலெல்லாம் அவன் குடிச்சுட்டான். வரயா நம்ப மாமா வீட்டுக்குப் போகலாம்-அதோ பாரு மாமா வரான்-வா-வா கூப்பிடு. என் தங்கக்கண்ணு அழலேயே.

கண்ணம்மா திரும்பவும், படுக்கையறையில் நுழைந்தபோது சீனுவாசன் எழுந்து உட்கார்ந்து மூட்டைப் பூச்சி வதம் செய்து கொண்டிருந்தான். 'பனியிலே எங்கே போனே?' என்று அவளைக் கேட்டான்.

அது அவள் காதில் விழவில்லை; மெல்லத்தூங்கும் குழந்தையைப் படுக்கையில் விட்டாள்.

சீனுவாசன் அவளை அணுகி அவள் கையைப் பிடித்துக்கொண்டான். 'கோபமான்னா தூக்கத்துலே என்னமோ உளறிவிட்டேன் அதுக்காக...'

கண்ணம்மாவால் இருக்க முடியவில்லை: தண்ணீர் பீறிட்டுக் கொண்டு வந்தது கண்களில். அவன் மார்பில் தலையைச் சாய்த்துக் கொண்டு அழுதாள். சீனுவாசன் அவள் கண்களைத் துடைத்தவாறு 'அழாதேயேன்-என்ன சொல்லி இப்படி அழ! நான் செஞ்சது தப்பு, என்னை மன்னிச்சுடு' என்றான்.

சற்று பொறுத்து விம்மலினிடையே 'நான் ஊருக்குப் போகணும்—எனக்கு அம்மாவையும், சின்னாளையும் பார்க்கணும் போலிருக்குது என்றாள் கண்ணம்மா.

'இதுதானே! ஆகட்டும். போனால் போச்சு. நீ, நானு, பாப்பா எல்லாருமே போகலாம்—அழாதே!'



ஆட்டக்காரர்களை அழைத்துவர இரவு வெகு நேரமாய் விட்டது. பாளையம் பேயப்பார்த்தாள். அசுவத்தாமா இதற்குள் பெஞ்சியில்மேல் உட்கார்ந்து ஸிகரெட் ஊதிக்கொண்டிருந்தான். பீஷ்மர், துரோணர் எல்லாரும் பணத்தைப் பங்கு செய்வதில் முனைந்திருந்தார்கள். பாகம் ஆனதும் துரோணாச்சாரியார் வேஷத்தைக் களையாமல் அசுவத்தாமாவின் ஸிகரெட்டைப் பிடுங்கித் தாம் பிடிக்கலானார். அதற்குள் கூத்துவாத்தியார் 'ஆ—ஆ' என்று ஓடி வந்தார். 'தாடியை எடுக்காமல் ஸிகரெட்டைப் பிடிக்கலாமா? பற்றிக் கொண்டால் போச்சே இரண்டு ரூபாய்! சாப்பிட இரவு வெகு நேரம் ஆகிவிட்டது.

எல்லாருக்கும் வெறும் சோறும் குழம்பும் தான். அசுவத்தாமா வேஷம் கட்டின முருகனுக்குப் பால் கிடைத்ததும் தன் நடிப்பினால்தான் இவ்வளவு மரியாதை என்று அவன் தன் மார்பை பார்த்துக்கொண்டான். இதிலென்ன சந்தேகம்!



மயிலாப்பூர் ரஸிக ரஞ்சனி சபையில் சமீபத்தில் ஸரஸ்வதி பூஜையை யொட்டி சபைக்கு விஜயம் செய்த ஸ்திரீகளுக்குத் தாம்பூலத் தட்டுகள், பைகள் முதலியன வழங்கப்பட்டன.

## ஞாபகப்படுத்துகிறோம்



'சுதேசமித்திரன்' வாரப் பதிப்பில் வெளிவரும் கதைகள், கட்டுரைகள், கவிதைகள் இவற்றில் வரும் பெயர்கள், சம்பவங்கள் முதலியன எவரையும் குறிப்பிடுவன அல்ல. அவை முற்றிலும் கற்பனையே.

—ஆசிரியர்




## மைசூர் ஸ்ரீ கிருஷ்ணய்யங்கார்

முன்னர் வெளிவந்த வித்வான்கள் காலத்திலேயே இவர் திறம்பட்ட கச்சேரிகள் செய்து வந்தார். சென்னையிலும் திருச்சி முதலான இடங்களிலும் இவர் ஸஞ்சாரம் இருந்தது. நான் இவருடன்கூட திருச்சியில் கொஞ்ச நாள் வசித்திருந்து அநேகம் கச்சேரிகள் இவரிடம் கேட்டிருக்கிறேன். பிருகாக்கள் பேசக்கூடிய சாரீரத்தைப் பெற்று ஸ்வரங்களை நிர்ணயமாக பாடக்கூடியவர். இவர், பியாகடை, தர்பார், கானடா முதலான ராகங்களை அடிக்கடி பாடுவதில் பிரியமுள்ளவர். சிநேகிதர்களுடன் சுலபமாய் பழகி யார் இவரிடத்தில் எப்பொழுது கானம் கேட்க ஆசைப்பட்டாலும் அப்பொழுதே அவர்களுடைய அவாவை பிரதிபிரயோஜனமன்னியில் பூர்த்தி செய்து சந்தோஷப்படுத்துவார். மிகவும் தமாஷாய் காலத்தை கழித்து வந்தவர். ஸ்ரீ தியாக ப்ரும்மம் முதலான கீர்த்தனங்கள் இவருக்கு அதிக பாடாந்தரமில்லை என்ற ஞாபகம்.



## திருகோகர்ணம் ஸ்ரீ கணபதி அய்யர்

இவரை எனக்கு இவருடைய குழந்தை பருவ முதல் பரிச்சியமுண்டு. ஸங்கீத ஞானத்தில் ஆழ்ந்த கௌரவத்தை வகித்த குடும்பத்தில் ஜனித்தவர். இவரைச் சேர்ந்த சமீப பந்துக்கள் எல்லோரும் ஸங்கீத சாஸ்திரத்தில் நல்ல பரிச்சயமுள்ளவர்கள். நிர்ணயமான ஸ்வரக்ஞான தாள ஞானத்துடன் வாய்ப்பாட்டு பாடி வந்ததுடன் பிடில் வாத்யத்திலும் இவருக்கு நல்ல பரிச்சியம் இருந்து வந்தது. நான் இவருடைய கச்சேரிகளையும் வாத்யத்தையும் அடிக்கடி புதுக்கோட்டையில் கேட்டிருக்கிறேன். மைசூர் சமஸ்தானத்திலும், சென்னை முதலான இடங்களிலும் கச்சேரிகளை நடத்தி புகழுடன் விளங்கினர்.

கர்னடக கீர்த்தனங்கள், வர்ணங்கள் இவைகளில் மிக்க பாடாந்தரமும் அனுபவமும்உண்டு. இவருக்கு நெருங்கின பந்துவான ஸ்ரீ பஞ்சுவய்யர் என்ற ஒரு மஹா வித்வானின் சேர்க்கையினுல்தான் இவருக்கு இவ்வளவு ஞானம் வந்தது என்று திண்ணமாய் கூறலாம். இந்த ஸ்ரீ பஞ்சுவய்யர் அநேக ராகமாலிகைகளையும், கீர்த்தனங்களையும் கவனம் செய்து பிரஸித்தப் படுத்தியிருக்கிறுர். கஞ்சிரா வித்வான் தக்ஷிணுமூர்த்தி பிள்ளை முதலானவர்கள் இவரிடத்தில் மிக்க மதிப்புடன் நடந்து வந்தார்கள். புதுக்கோட்டை சமஸ்தானத்தில் விளங்கின கர்னடக வித்வான்களில் மிகச் சிறந்தவர் இவர். தாளப்பிரஸ்தாரத்திலும், பல்லவியிலும் விசேஷ நைபுண்யம் பெற்றிருந்தார்,

## நெரூர் கோபாலய்யர்

இவர் பால்யத்திலேயே சுத்தமான ஸ்வரக் ஞானத்துடன் விளங்கி; கீர்த்தனங்களுக்கும், பல்லவிகளுக்கும் ஸ்வரம் பாடுவதில் மிக்க வல்லமையடைந்தார். திருச்சியில் இரண்டொரு சமயம்தான் இவருடைய கச்சேரியை நான் கேட்டிருக்கிறேன். அக்காலத்தில் நிரம்பசிறியவயதுடையவர்தான். அபாரமானகியாதியுடன் இவர் வெகு நாள் விளங்கக்கூடியவர் என்று ஜனங்களால் மெச்சப்பட்டார். ஸ்வரம் பாடுவதில் சில பிக்கட்டான ஸ்வர ஸஞ்சாரங்களை செய்து; இந்த மாதிரியான ஸஞ்சாரம் இதரருக்கு ஸாத்யப்படாது என்ற கௌரவத்தையும் பெற்றுர். நான்கேட்கும் காலத்தில் இவருக்கு அதிக கீர்த்தனங்கள் பாடாந்தரமிருந்ததாகத் தெரியவில்லை. இவர் சொல்ப காலம்தான் ஜீவியத்தில் விளங்கினதாகத் தெரிகிறது.



## நாடிய ராமு அய்யர் (வேணுகானம்)

தஞ்சை ஜில்லா, திருத்துறைப்பூண்டி தாலுகாவில் ஜனித்து சரப சாஸ்திரிகள் காலத்திலேயே இந்த வேணு வாத்யத்தைக் கையாண்டவர். இவருடைய வாசிப்பு காதுக்கு இனிமையாகவே இருந்தது. வாசிக்கிறவரை கொஞ்சம் பாணியை அநுசரித்தும், பிக்கட்டு தாளங்களில் ஸஞ்சாரம் செய்யாமல் ஜனங்களுக்கு ரம்யமாய் இருந்து கொண்டிருக்கும். என்னுடன்கூட ரொம்ப பழகியவர். என் ஜாகையிலும் அடிக்கடி வந்து வாசித்திருக்கிறுர். ஸங்கீத சக்கரவர்த்தி சரப சாஸ்திரிகள் அவர்கள் இவர் காலத்தில் கச்சேரி செய்து கொண்டு வந்ததால் கிரமமாய் ஏற்படவேண்டிய பிரஸித்தி இவருக்கு இல்லாமல் போயிற்று, உயர்ந்த ஸாத்தீக குணமுள்ளவர்.



பம்பாய் பிரதம மந்திரி ஸ்ரீ பி. ஜி. கெர். சமீபத்தில் நடந்த கலவரம்பற்றி பத்திரிகை ஆசிரியர்களைக் கூட்டிப் பேசினர்.

இவர் காலத்தில் சாஸ்திரிகள் இந்த வேணுவை கச்சேரியாக உபக்ரமித்த பிறகு இந்த ராமுய்யரைத் தவிர வேறு ஒருவரும் இந்த வாத்யத்தை அக்காலத்தில் கையாளவில்லை.

★

## பழமாநேரி சுவாமிநாதய்யர் (வாய்ப்பாட்டு—பிடில்)

கானவித்தையில் விசாரதராய் விளங்கி வந்த மஹா வைத்யநாதய்யர் சிஷ்யர்களில் ஒருவர். ச்ருதிவீனமான சாரீரத்தை வஹித்தவர். பிடில் வாத்யத்தில் பரிச்சியும் செய்து அத்துடன்கூட சாரீரத்தை சேர்த்து கச்சேரி செய்வதற்கு தயார் செய்துகொண்டார். பெரியஸ்தாயி ச்ருதியில் பாடி நிர்வஹிக்கக்கூடியவர். ஸ்வரங்களை மிக்க அழகாயும் பிக்கட்டாயும் பாடுவார். ஸ்ரீ தியாகப்ரும்ம கீர்த்தனங்களில்விசேஷப்பரிச்சியம் பெற்றவர். இவர் கச்சேரிகளை நான் அடிக்கடி கேட்டிருக்கிறேன். பெரிய வித்வான்களுடைய பழக்கத்தினுல் பாடுகிற மார்க்கங்கள் ரொம்பவும் உயர்தரமுள்ளதாக இருக்கும். சிவன்வாளுடைய மேளகர்த்தா சக்கரத்தை இவரிடம் கேட்டு நான் ரொம்பவும் ஸந்தோஷமடைந்திருக்கிறேன். அநேக இடங்களில் ஸஞ்சாரம் செய்து எந்தவிதமான சபையிலும் நிர்பயமாய் கச்சேரி செய்து வந்திருக்கிருர். இவர் சாரீரம் பிடில் தந்தியுடன் கூட இழைந்து ச்ருதிலீனமாயிருக்குமாகையால் க்ஷேத்ரக்ஞர் பதங்களை பிற்காலத்தில் அநேகம் பரிச்சியம் செய்துகொண்டு ஸம்பிரதாயத்தை நழுவவிடாமல் பாடுவர். குருபக்தியில் சிறந்தவராகையால், விசேஷ மதிப்பு இவருக்கு இருந்து வந்தது. என்னுடைய முக்ய சிநேகிதர்களில் இவரும் ஒருவர்.

★

## பதினைந்து மண்டபம் ஸபேசய்யர்

பரம்பரையாய் ஸங்கீத ஞானத்தில் தேர்ச்சி அடைந்த குலத்தில் ஜனித்தவர் இவர். இவர் பிதா பிரஸித்த ஸங்கீத வித்வான்களில் ஒருவர். இவருடைய சாரீர காம்பீர்யமும் ஸ்வரக் ஞானமும் மெச்சத்தகுந்தது. மஹா வைத்யநாதய்யர் சிஷ்யர்களுள் இவரும் ஒரு முக்யஸ்தர். ஆகையால் இவருடைய கானத்தின் பெருமை மிக்க சிலாகிக்கும்படியாய் இருந்தது. என்னிடத்தில் அன்பு பாராட்டி சிநேகம் செய்தவர்களில் இவரும் ஒருவர். அண்ணமலை ஸர்வ கலா சாலையில் பிரதம ஆசிரியராக உத்யோகத்தை வஹித்து பெருமையை அடைந்தார். கான வித்தையில் பிரஸித்தியை பெற்று கச்சேரி செய்து வரும் ஸ்ரீமுசிரி சுப்ரமணிய அய்யர் அவர்கள் இவரிடத்தில் அதிக பரிச்சயம் செய்துகொண்டு பழகி வந்தார். சில கனவானுடைய மேளகர்த்தா சக்ரத்தை இவரும் அழகாகப் பாடுவார்.

★

## கோடீச்வர அய்யர்

முருகன் அருள்பெற்று ஸ்காந்த புராணத்தைப்பாடி "கவி குஞ்சர பாரதி" என்று கியாதியுடன் விளங்கிவந்த பெரியவருடைய மருமான் இவர். பால்யமுதலே இவருக்கு ஸங்கீதத்தில் அதிக ருசி. ஆங்கில பாஷை கற்க விரும்பி பி. ஏ. பரீக்ஷைவரை சென்று பட்டம் பெற்று சென்னை ஹைகோர்ட்டில் உத்யோகத்திற்கு அமர்ந்தார். காலக்கிரமத்தில் இதில் உயர்ந்த ஸ்தானத்தையும் பெற்ருர். 'ஸ்காந்த புராணத்தின்" அனேக கீர்த்தனங்களை முகஸ்தமாய் பாடுவர். நாளடைவில் இவருக்கு ஸ்வரக் ஞானமும் ஏற்பட்டது. ஸங்கீதத்தை தொழிலாக வைத்துக்கொள்ளாமல், சிநேகிதர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி பாடி திருப்தி செய்துவைப்பார். மாமாவால் இயற்றப்பட்ட ஸ்காந்த புராண கீர்த்தனங்களை அச்சிட்டு பிரசுரம்செய்தவர். கர்வம் துளியின்றிப் பழகி வருவார்.

———

# கடன் வாங்குபவர்கள் கவனியுங்கள்!

சுபஸ்ரீ

“கடன் பட்டார் நெஞ்சம் போல் கலங்கினான் இலங்கை வேந்தன்...” என்று எங்கேயோ, எப்போதோ கம்பராமாயணத்தில் படித்ததாக ஞாபகம். ஆனால் கடன் பட்டவனைவிட, கடன் வாங்குபவன் மனதுதான் மிகவும் கலங்கும் என்று தோன்றுகிறது. ‘ஏன்?’ என்று கேட்கலாம். வாங்கின கடனுக்காவது சாக்குபோக்குச் சொல்லலாம், அல்லது தராமலேயே நாமம்கூடப்...போடலாம்! ஆனால், கடன் கேட்கப் போனாலோ...அடேயப்பா! இந்தக் கல்நெஞ்சர்கள் லேசில் தந்துவிடுகிறார்களா, என்ன? மீனமேஷம் பார்த்து, பத்து தடவை இழுக்கடித்து, ஆளைப் பரீக்ஷை செய்து, ஆயிரம் முக்கல் முனகல்களுடன் கேட்ட தொகையில் பாதியைத்தானே கொடுக்கிறார்கள், இந்தக் கலிகாலக் கர்ணர்கள்! பெட்டியில் குட்டி போடும் பணத்தை, இவர்களென்ன வைவஸ்வத புரிக்குச் செல்லும்போது, (எமலோகத்துக்கு) ‘எதற்கும் கையோடு இருக்கட்டுமே!’ என்று எடுத்துக்கொண்டா போகப்போகிறார்கள்? என்னவோ போங்கள்! நாமும் அலுக்காமல் இவர்களோடு மல்லுக்கு நிற்கவேண்டியிருக்கிறது!

அது கிடக்கட்டும்; உங்களுக்கு அவசரமாக ஐந்து, பத்து வேண்டுமா? ஒரு யோசனை. என்னவென்றால் உங்களுக்கு யாரைக் கேட்பது, எப்படிக் கேட்பது எனத் தெரியவில்லையா? அப்படியானால் இதைப்போலசெய்யுங்கள்.

நீங்கள் ஐந்து ரூபாய்க்கு என்ன வழி செய்வது என்று புரியாமல் மனதை அலட்டிக் கொண்டே, தெருவின் வழியாக நடந்து செல்கிறீர்கள். எதிர்த்தாப்போல் ‘அல்டாப் அருணாசலம்’ அமர்க்களமாக நடந்து வருகிறான். உங்களுக்குத்தெரியும், அவனிடம் கைவசம் எப்போதும் அதிகப் பணமிருக்கும்; ஆனால் ஆசாமி எளிதில் மசியமாட்டானென்று!

சரிதான்; ‘விறுவிறு’ என்று அவனிடம் நடவுங்கள், ‘என்னடா அருணாசலம், ஆளையே காண்றதில்லை? உன் ‘பிஸினஸ்’ எல்லாம் இப்போ அபாரமா நடக்கிறதாமே! கேள்விப்பட்டேன்; ஆமாம், வாயேன் இப்படி ஒரு ‘கப்’ காப்பி சாப்பிட்டு விட்டுப் போகலாம்’ என்று தளுக்காகக் கூப்பிடுங்கள்.

‘அல்டாப்’ அருணாசலமா மறுப்பான்? ‘தானாக வரும் ஸ்ரீதேவியைக் காலால் உதைப்பானேன்? என்று உடனே பக்கத்திலிருக்கும் காப்பி ஹோட்டலில் பாய்ந்து, கம்பீரமாய் உட்கார்ந்து விடுவான். ‘ஐயர்வாள், ‘ஸ்டிராங்’ காக ரெண்டு ‘கப்’ காப்பி கொண்டு வாருங்கள்’ என்று முதலிலேயே முன் ஜாக்கிரதையாக ‘ஆர்டர்’ கொடுங்கள். இல்லாவிட்டால் அருணாசலம் ஸ்வீட், காரம் என்று பல தினுசுகளில்இறங்கி விடுவான்.

அடுத்தபடியாக ‘பில்’கொடுப்பதில்தான் உங்கள் சாமர்த்தியத்தைக்காண்பிக்க வேண்டும். கொஞ்சம் முந்திக்கொண்டு ‘பில்’ பணத்தை நீங்களேதான் கொடுத்து விடுங்கள். ஆனால் ஹோட்டலை விட்டுக் கீழே இறங்கியதும் ‘அடாடா! மறந்து விட்டேனே!’ என்று கையை உதறுங்கள்.

‘என்னடா...?’ என்பான் ‘அல்டாப்’ அலக்ஷியமாக!

‘அட போடா! ஒரு ‘டானிக்’ வாங்கிண்டு வாங்கோன்னு என்னிடம் என் ஸம்ஸாரம் ஐந்து ரூபாய் கொடுத்தாள். அதை அப்படியே மறந்துபோய் டேபிள் மேலேயே வைத்துவிட்டு வந்து விட்டேன். இப்ப என்ன பண்றது? (அப்பொழுது அருணாசலம் மூஞ்சியைக் கவனிக்காதீர்கள். சற்று முன் காப்பி குடித்ததினால் மலர்ந்த அவனது முகம், இப்பொழுது கொஞ்சம் சுருங்கத்தான் செய்யும்!) பரவாயில்லை; அருணாசலம் உன்னிடம் ஐந்து ரூபாய் இருந்தால் கொடேன், நாளைக்கு அகத்திலிருக்கும் ஐந்து ரூபாயை அப்படியே உங்கள் வீட்டில் வந்து கொடுத்துவிட்டுப்போகிறேன்......” என்று கூசாமல் ஒரு ‘அடாமிக் பாமை’ (அணுகுண்டு) அவன் முன்னால் போடுங்கள்! அவ்வளவுதான்; கட்டாயம் ‘அல்டாப்’ அந்த இடத்தில்

ஐந்து ரூபாயை அவிழ்த்து வைத்துவிட்டுத்தான் மறு காரியம் பார்க்க வேண்டும்.

ஒருவேளை அவன், "அட பாவமே! நான் 'பர்ஸ்' கொண்டு வரவில்லையே!" என்று மற்றொரு 'அணுகுண்டைத்' தூக்கிப்போட்டால், பொங்கிவரும் கோபத்தை அடக்க முடியாமல், உங்கள் நெற்றிக்கண்ணால் எரித்து விடுவதுபோல் சும்மாப் பார்க்கக் கூடாது. இதெல்லாம் 'காப்பி சாப்பிடும் நாடகத்'திற்கு முன்பே நீங்கள் ஜாடையாகக் கவனித்திருக்க வேண்டிய விஷயங்கள், ஸார்!

அதுபோகட்டும்; ஞாயிற்றுக் கிழமையன்று வீட்டிலிருக்கிறீர்கள். 'அன்று அகத்திற்குத் தேவையான சில சில்லரை சாமான்களுக்காக அவசரமாக ரூபாய் ஐந்து வேண்டும்' என்று உங்கள் தர்மபத்தினி முடுக்கி விட்ட கிராமபோனைப்போல் முனகிக்கொண்டே இருக்கிறாள். இல்லாவிட்டால் 'ஸ்டிரைக்' பண்ணுவேன் என்று பயமுறுத்துகிறாள். இந்த தர்ம சங்கடமான நிலையில் உங்களுக்குப் பிச்சு அய்யர் ஞாபகம் வருகிறது. அவரிடம் எப்படியும் தேதி 28 ஆனாலும் இருபது, முப்பது கையிலிருக்கும் என்று கட்டாயம் உங்களுக்குத் தெரியும். மேலும் மனிதர் நல்லவர்; சமயத்தில் உதவி செய்யத் தவற மாட்டார் என்ற நன்னம்பிக்கையும் இருக்கிறது அல்லவா?

அந்தப் பரம சாதுவான பிச்சு அய்யர் உங்களைப் பார்த்தவுடனேயே, "யார் சர்மாவா? வாங்கோ, வாங்கோ" என்று முகம் மலரத் தலையசைத்து உற்சாகமாய் வரவேற்கும்போதே, இவரிடம் வந்த 'விஷயத்தை' வெளியிடுவது எப்படி என்று உங்கள் உள்ளம் தயங்குகிறதா? பரவாயில்லை; கொஞ்சம் தைரியப்படுத்திக் கொள்ளுங்கள்.

"அடியே பார்வதி! நம்ப சர்மாவுக்கு ஒரு 'கப்' காப்பி கொண்டா" என்று அந்த அப்பாவிப் பிச்சு அகமுடையாளை 'ஆர்டர்' பண்ணுகிறார். ஆனால் இதையெல்லாம் கண்டு உங்கள் கல் மனம் தளர்வடையாமல் கவனித்துக்கொள்ளுங்கள்.

'கோபுர வஸ்து' மாதிரி (மாதிரி என்ன? சாக்ஷாத் அதுவேதான்!) பிச்சு அய்யரின் பிள்ளை அங்குவந்து உங்கள் 'ஷர்ட் பாக்கட்'டையெல்லாம் 'ஸென்ஸார்' பண்ணுகிறானா? சரிதான்; அதுதான் சமயமென்று, சந்தர்ப்பத்தை நழுவ்விடாமல் 'யாரு, இதுதான் உங்கள் பிள்ளையா, ஸார்? பையன் பலே சூட்டிகையா இருப்பான் போலிருக்கே!" என்ன படிக்கிறான்?......" என்று கொஞ்சம் நீங்களாக ஆரம்பியுங்கள். அவ்வளவுதான்; பிச்சு அய்யர் தொடங்கி விடுவார், தனது 'புத்திர ராமாயணத்தை'! "இரண்டாம் கிளாஸ் படிக்கிறான், மிஸ்டர் சர்மா. அவன் வாத்தியார் சொல்கிறார், மூன்றாம் கிளாஸ் படிக்கும்படியாக அவ்வளவு கெட்டிக்காரனாக இருக்கிறானென்று! இப்பவே இங்கிலீஷ் எப்படி பேசுகிறான் என்கிறீர்கள்! டேய் சுந்தர், வாட்டிஸ் யுவர் நேம்?" என்று பெருமையாக பிச்சு அய்யர் கேட்பார்.

பையன் பதினைந்து நிமிஷம் 'திரு திரு' வென்று முழித்து விட்டுக் கடைசியாகத் திக்குமுக்காடி, "மை நேம் ஈஸ், வாஸ், ஆஸ் சுந்தர்!" என்று சொல்லி வைத்தாலும், நீங்கள் கொஞ்சம் சிரிப்பை அடக்கிக்கொண்டு "தேவலையே, பயல் இன்னும் சிறிது நாட்களில் நம்மையே தூக்கி அடிச்சுடுவான், ஸார்! நீங்கள் வேண்டுமானால் பாருங்கள், அவன் முகத்திலே இருக்கிற தேஜஸ் சொல்கிறது, அவன் நாளைக்குப் பெரிய 'ஆளாக' வரப்போகிறானென்று" என்று கொஞ்சம் தயங்காமல் முகஸ்துதி செய்துவையுங்கள். இதெல்லாம் கேட்கப்போகும் 'விஷயத்திற்கு'...!

இதற்குள் காப்பி வருகிறது. நண்பர் பிச்சு அய்யர் கட்டாயம் குடிக்கும்படி வற்புறுத்துகிறார். அது தேயிலையா அல்லது காப்பித் 'தண்ணீரா' என்பதைத் தீர்மானிக்க முடியாமலே அதைக் குடித்து வைக்கிறீர்கள். குடித்த பிறகு, இடித்த புளி' மாதிரி சும்மாயிருக்காதீர்கள். சமையற் கட்டிலிருக்கும் 'அம்மாள்' காதில் விழும்படி, அவ்வளவு உரத்த குரலில், "அமிர்தம் போங்கள்; நானுமதான் நல்ல காப்பிக் கொட்டையாக வாங்கித் தருகிறேன். ஆனால் என் மனைவி காப்பிபோடும் அழகையன் கேட்கிறீர்


'......யார் சர்மாவா.........வாங்கோ......வாங்கோ......!'

கள்? அதைச் சாப்பிட்டால் காபி குடித்தாற்போலவா இருக்கிறது? இந்த விஷயத்தில் நீங்கள் ரொம்ப அதிர்ஷ்டசாலி ஸார்!'' என்று உங்கள் மனச் சாட்சிக்கு விரோதமாக வான ளாவ புகழுங்கள்! அவ்வளவு தான்; அந்த வீட்டுப் பொக்கிஷ தார்—அவள்தான் பிச்சு அய்ய ரின் பிரிய ஸம்ஸாரம்—நீங்கள் கேட்கப்போவதற்குத் தடையே சொல்லமாட்டாள்.

பிறகு மெள்ள, வந்த காரி யத்தை விவரியுங்கள். உங்க ளுக்கு வேண்டியது ஐந்து ரூபா யானல், பத்து ரூபாய்க்கு அடிப் போடுங்கள். அப்பொழுதுதான் அதில் பாதி ஐந்தாவது கிடைக் கும்.

'எனக்கே இந்த மாதம் கொஞ்சம் அதிகச் செலவு. எதற்கும் இருக்கிறதா பார்க் கிறேன்!' என்று கூறிவிட்டு, உள்ளே போய் 'மந்திரி மனைவி' யிடம் ஆலோசித்து முடிவாக ஐந்து ரூபாயுடன் வெளியே வந்து 'ஏன் ஸார் சர்மா, நீங்கள் என்ன பத்தா கேட்டீர்கள்? 'வெரி ஸாரி!' இப்போதைக்கு ஐந்து ரூபாய்தான் இருக்கிறது ......என்று இழுப்பார். உடனே நீங்கள் 'அதற் கென்ன, பரவாயில்லை. 'மானேஜ்' பண்ணிக்கிறேன்!' என்று பதில் கூறிவிட்டு, அதை வாங்கிக்கொண்டு, வந் தனம் செலுத்தும் பாவனையாக நாலு 'தாங்ஸ்' போட்டுவிட்டு, 'விடுவிடு' என்று உங்கள் வீட் டிற்கு நடவுங்கள்.



இடைக்கால சர்க்காரின் விளம்பர இலாகா மந்திரியான ஸர்தார் வல்லபாய் படேல் பத்திரிகைப் பிரதிநிதிகளைச் சந்தித்து சல்லாபித்தபோது எடுத்த படம்.




வரகூர். வேங்கடதாஸன்

## முன்வந்த இதழ்களில்

கொங்கணத்துக்கும் தொண்டை மண்டலத்துக்கும் இடையே உள்ளது கங்கநாடு. அந்நாட்டின்மீது 1200 வருஷங்களுக்கு முன்னர் பாண்டியதேசத்து அரசனான ராஜஸிம்மன் படையெடுத்தான். தன் தந்தையின் இறுதி விருப்பத்தை நிறைவேற்றி, கங்கநாட்டு மன்னனை சிவமாறனைப் பழி தீர்க்கமுற்பட்டான் ராஜஸிம்மன்.

சிவமாறன் தன் புதல்வன் வல்லபனைத் தூதனுப்புகிறான். பாண்டியனுடன் இருந்த பழம்பகையை மறந்து, நட்புடன் வாழ்வதற்குத் தன் தந்தை விரும்புவதாக வல்லபன் பாண்டியனிடம் சொல்கிறான். பாண்டியன் சீற்றமடைகிறான். சிவமாறனிடமுள்ள உக்ரோதயம் என்ற ரத்னமாலையையும் அவன் புதல்வி பூஸுந்தரியையும் தன்னிடம் சேர்ப்பித்துப் பணிந்தால் சமாதானமாக இருப்பதாகப் பாண்டியன் எச்சரிக்கை செய்கிறான். உக்ரோதய மாலையை அணிந்த பூஸுந்தரி பாண்டியன் விருப்பத்தைப் புறக்கணித்து விட்டதாகச் சொல்லி உடனே வல்லபன் நாடு திரும்புகிறான்.

பாண்டியன் தன் மந்திரி மாறன்காரியுடன் யோசித்து, கங்கவேந்தனைச் சிறைசெய்ய முயல்கிறான். உடனே கங்கநாட்டின் தலைநகரான கங்கபாடியை நோக்கிப் பாண்டியன் படைகளுடன் போகிறான். முற்றுகை செய்கிறது பாண்டியன் படை. கங்கவேந்தன் மனம் கலங்குகிறான். பாண்டியனை எதிர்க்கும்படி சேனாதிபதி வீரதுங்கனை அனுப்பிவிட்டு தன் புதல்வருடனும், புதல்வியுடனும் ஆலோசனை செய்கிறாள். பல்லவ சேனை உதவிக்கு வருமென்று எதிர்பார்ப்பதாகச் சொல்கிறான். ஜனங்கள் கங்கவேந்தரிடம் முறையிட்டுக்கொள்கிறார்கள். ஆறுதல் சொல்லியனுப்புகிறான் சிவமாறன். பாண்டியனை எதிர்க்கமுடியாமல் கங்க வீரர் சிதறி ஓடுகிறார்கள். பல்லவர் உதவியும்கிடைக்கவில்லை. நகர ஜனங்களும் கலகம் செய்கிறார்கள். உடனே சிவமாறன், தன் புதல்வியின் பாதுகாப்பைக் கருதி நாடுகடந்து, பல்லவர் தலைநகரான காஞ்சியை அடைகிறான்.

பல்லவ நாட்டின்வேந்தன் பரமேச்வரன்—கிழவன்; இருதய நோயுள்ளவன். கங்கவேந்தனை வரவேற்று ஸிம்மபவனம் என்ற மாளிகையில் இருக்கச் செய்கிறான். பல்லவன் சபை கூடும்போது, கங்கராஜனை அழைத்துவருமாறு தன் புதல்வர் சித்திரமாயன்—குமார பரமேச்வரன் இருவரையும் அனுப்புகிறான். கங்கராஜன் தன் சுற்றத்துடன் சபை வருகிறான். அரசகுமாரர்களின் பார்வை கங்க கன்னிகைமீதே பதிகின்றது. உக்ரோதயமாலை குறித்து சபையில் வாதப் பிரதிவாதங்கள் நிகழ்கின்றன. சம்பாஷணையின் இடையே பூஸுந்தரி கோபங்கொண்டு பேசிவிட்டு வெளியேறுகிறாள். அதைக்கேட்டு யாவரும் திகைப்படைகிறார்கள். பாண்டியனை எதிர்ப்பதுபற்றி சம்பாஷணை நடந்தது. பின்னர் பூஸுந்தரி அழைத்து வரப்படுகிறாள். அப்போது முடிவாகப் பாண்டியனிடம் தூது அனுப்புவதென்று உறுதிசெய்து சபைக் கவிஞருமான ஆசார்யர் அநிருத்தர் அழைத்துவரப்படுகிறார், அவர் பாண்டியனிடம் தூதுசென்று திரும்புகிறார்.

பல்லவ வேந்தன் காலமாகவே அரசுரிமையை யார் ஏற்பதென்ற பிரச்னை எழுகிறது. நகரப் பெருமக்கள் சபையில் வாதம் முற்றி முடிவில் நந்திவர்மனுக்கு முடி சூட்டப்படுகிறது.

"கவிஞரே....தங்கள் வார்த்தைகள் என் மனத்தில் நிலையாகப் பதிந்தன ......தங்கள் துணை இருக்கும்வரையில்...நான் கவலைப் படமாட்டேன்"—என்றான் நந்திவர்மன் கை குவித்து.

"கவிஞருடைய தூதால் இவ்வளவு சூழ்ச்சிகளும் வெளியாகி விட்டன;......இனி வாளாவிருப்பது உசிதமல்ல;......சித்திரமாயனுடன் சென்ற வயிரமேகனை...... இந்நகர் விட்டுப் புறப்படுமுன்னர் ...சிறை செய்துவிட வேண்டும்; இல்லையானால்...அவனால் வேறு தொல்லைகள் உண்டாகும். இது என் பிரார்த்தனை" என்றார் ஹிரண்யவர்மர்.

அநிருத்தர் நகைத்தார்.

"ஏன்....என் தந்தையார் சொல்வதிலும் உண்மை இருக்கிறது;... யோசனை செய்யவேண்டும். ராஷ்டிரகூட வீரன் அற்பமானவன் அல்லவே!" என்றான் நந்திவர்மன்.

"ஆம்;...நிச்சயம் அவனைச் சிறைப்பிடித்து விடுவதே நல்லது; இல்லையானால் இந்தச் சூழ்நிலையில் அவனால்..." என்று சிவமாறனும் கூறினான்.

"அவனால் ... ஒன்றும் நடந்து விடாது;...அவனை என்றேனும் ஒரு நாள் எதிர்த்தாக வேண்டியது தான். ராஷ்டிர கூடர்களின் பலம் இப்போதுதான் தலைக்காட்டுகின்றது; இந்நிலையில் அவனைச் சிறைப் பிடிப்பதால்... என்ன பயன்? தக்ஷிண யாத்திரை செய்து போகும் அவனை நாம் நம் நகரில் சிறை செய்வது அநீதமல்லவா? முதலில் சித்திரமாயனைப் பிடிப்பதே...காரியம்;... புறப்படுங்கள்" என்று கூறிவிட்டு உதயசந்திரனைப் பார்த்தார் அநிருத்தர்.

## 21

## கவிஞர் தூதும் பிறகும்

"நான் சித்தமாயிருக்கிறேன்; தாங்கள் நினைத்ததைச் செய்து முடிக்கின்றேன்" என்று கூறியவனாய்ப் புலவருக்குமுன் நின்றான் உதயசந்திரன். அவன் முகத்தில் குதூகலப் புன்னகை மிளிர்ந்தது.

"நான் இப்போது நினைத்ததை நீயேதான் செய்ய முடியும்; உன்னுடைய காரியமே அது...தெரிந்ததா?" என்று உற்றுப் பார்த்தார் அநிருத்தர்.

"மகாசாமந்தாதிபதிக்குத் தாங்கள் என்ன கட்டளையிடுகிறீர்கள்; என்பதை நான் அறிவேன்" என்றான் நந்திவர்மன்.

ஒரு கணம் மௌனமாகப் பார்த்தார் கவிஞர்.

* * *

"உதய சந்திரா, நாற்பதினாயிரம் பல்லவப்படைவீரர்களும் காஞ்சி நகரைச் சூழ்ந்து பத்ம வியூகமாக நிற்கட்டும்; நம் நகருக்குள் அந்நியப்படை வீரர் யாரும் புகாமலும், உள்ளிருப்பவர் வெளியேறாமலும் பாதுகாத்துக் கொள். சித்திரமாயனைச்சேர்ந்த இருபதினாயிரம் படைவீரர்களையும் இந்நகரைவிட்டு வெளியேற விடாமல் அகப்படுத்திவிடு; அப்படைகளுக்குத் தலைமை தாங்கும் வில்லவனைக் காணுமிடத்திலேயே சிறைசெய்துவிடு. எந்தத்தருணத்திலும் பாண்டியன் படைகள் வந்துவிடலாம்; ஆனால் நீ ஏமாற்றமடைந்தால்...அதைவிட அவமானம் வேறில்லை...இனி நீ தாமதம் செய்யவேண்டாம்."

இவ்வாறு ஆசாரியர் அநிருத்தர் ஆக்ஞையிட்டார்.

உதயசந்திரன் பரவசமடைந்தான் அநிருத்தரின் கட்டளையைக் கேட்டு. அவன் தோள்கள் எழுந்து பூரித்தன.

"கவிஞர் பெருமானின் கட்டளையை உவகையுடன் ஏற்றுக் கொண்டேன். தாங்கள் கூறியனவெல்லாம் நன்றாக—மதிக்கத்தக்கனவாக நிறைவேறும். பல்லவ சக்ரவர்த்தி ராஜ ராஜ ஸ்ரீநந்திவர்மதேவருக்கு நான் செய்யும் புனிதத்தொண்டு இதைவிட வேறு என்ன இருக்கின்றது? இந்த ஸாம்ராஜ்ய லட்சுமிக்கு அழகு செய்யும் பணியல்லவா எனக்குக் கிடைத்தது;... ஆனால்..ஒன்று..." என்று தயக்கத்துடன் நின்றான் உதய சந்திரன்.

"என்ன? ..."—அநிருத்தர் கேட்டார்.

"சித்திரமாயனோ அல்லது ராஷ்டிரகூட வயிரமேகனோ என் கண்களுக்கு முன் காணப்பட்டால்!—"

"காணுமிடத்தில் அவ்விருவரையும்...உன் பாதுகாப்புடன் நகரை விட்டு வெளியேற்றிவிடலாம்.



ஆனுல்...வில்லவனைச் சிறைசெய்து ...அவன் கீழ்—படைகளை அகப் படுத்தி நிலைப்படைகளாக ஆக்க வேண்டும்.—" இவ்விதம் அநிருத்தர் கட்டளையிட்டார்.

"உதயசந்திரா.........உன் கடமையை நீ செய்து விடு: வெற்றி நம்மை வலியவே அடைந்துவிடும்." என்ருர் ஹிரண்யவர்மர். அவர் அடைந்த மகிழ்ச்சி எல்லையில்லை.

"நந்திவர்ம தேவரின் தலைமையின் கீழ் சேனைத் தலைமை பெறுவதற்கு என் இருதயம் ஏங்கிக் கொண்டிருந்தது ...இன்று தான் அந்த ஏக்கம் ஒழிந்தது. தங்கள் கட்டளை, விடைபெற்றுக்கொள்கிறேன்" என்று சொன்னுன் உதயசந்திரன். மறுகணத்தில் மின்னல் ஒளியிட்டது போன்று வாளை உருவி வலக்கையில் தாங்கிக்கொண்டான். நந்திவர்மனுக்கு முன் தலைவணங்கி நின்ருன்.

அப்போது நந்திவர்மன் அடைந்த பூரிப்புக்கு எல்லையில்லை.

"உன் கடமையை நீ நிறைவேற்றுவதால் எனக்கு வெற்றி—ஆறுதல்—இன்பம்; இவை தவிர ஸாம்ராஜ்யத்திற்குப் பெருமை உலகமுள்ளளவும் நிலைத்துநிற்கும்: போய்வா!" என்ருன் சக்கரவர்த்தி நந்திவர்மன்.

உதயசந்திரன் மிடுக்குடன் வெளியேறினுன்.

"வெற்றிக்கு விதையிட்டாயிற்று...." என்ருர் அநிருத்தர்.

"சித்திரமாயனின் செருக்கு நிலைகுலையும்" என்ருர் ஹிரண்யவர்மர்.

"பாண்டியன் வீழ்ச்சியடைந்து மானமிழக்கும் நாள் துரிதமாக முன் வருகின்றது." என்ருன் சிவமாறன்.

"பாண்டிய—சோழ— தொண்டை மண்டலம் மூன்றும் பல்லவ ஸாம்ராஜ்யத்தில் அகப்பட்டபின் தமிழகத்தின் ஒரு பகுதியான சேர மண்டலத்தையும் அகப்படுத்தி—நம் வேந்தர் அசுவமேத யாகம் செய்யும் பாக்கியம் விரைவில் கிட்ட வேண்டும் என்று பிரார்த்தனை செய்கின்றேன்' என்று முத்தரையன் கூறினுன்.

"முத்தரையா,......நந்திவர்மனுக்கு நீ...உடல்...இவன் உயிர்,...நந்திவர்மனுக்குப் புறத்தே உலாவும் உயிர் நான்;......இவ்வித நிலையிலிருந்து பிரிதல் பெரும் பாதகமாகும்;......புறப்படுங்கள்...', என்று சொன்னுர் அநிருத்தர்.

"நந்தி வர்மனின் உயிராக... இருக்கும்...அவனை...கிடைக்கச் செய்வதும் உங்கள் கடமை" என்று சொன்னுன் சிவமாறன்.

நால்வரும் நகை செய்தார்கள் அவன் வார்த்தைகளைக் கேட்டு.

"தேர் சித்தமாயிருக்கிறது;..." என்ருன் முத்தரையன்.

'முதலில்...சித்திர மாயனின் மாளிகை போவோம்"—இவ்விதம் கூறிவிட்டு அநிருத்தர் முன்னே சென்ருர்.

அவரைப் பின் தொடர்ந்து ஹிரண்ய வர்மர், சக்கரவர்த்தி நந்தி வர்மன், சிவமாறன், பெரும்பிடுகு முத்தரையன் நால்வரும் கடுகிச் சென்ருர்கள்.

மண்டபத்தின் வாயிலில் நின்ற தேரில் ஐவரும் ஏறிக் கொண்டார்கள். முத்தரையனே தேர்ப்பாகனுக அமர்ந்து சித்திரமாயனின் மாளிகை நோக்கிச் செலுத்தினுன்.

* * * *

ராஜகிருகத்தின் வடபுறத்திலே சித்திரமாயனின் தனி மாளிகை விளங்கியது. அம்மாளிகையை மிக விரைவில் அடைந்தது நந்திவர்மனின் தேர். மாளிகையின் வாயிலில் பெருங் கூட்டம் காணப்பட்டது. முத்தரையன் அதைக் கவனித்தபடியே அந்தக் கூட்டத்தின் அருகிலே தேரை நிறுத்தினுன்.

தேரில் நந்தி வர்மன் அமர்ந்திருப்பதைக் கண்டவுடன் அந்தக் கூட்டத்தினர் சட்டென்று நிலை கலங்கினவர்களாய் நாலு புறமும் கலைந்து நின்ருர்கள். மாளிகையின் வாயிலில் ஒற்றைத் தேர் மட்டும் நின்றது. அதனை அடுத்தாற்போல் சிறு குதிரைப் படை ஒன்றும் காணப்பட்டது.

தேரில் அமர்ந்திருந்த வயிர மேகன், ரேவா, சித்திர மாயன் மூவரும் நந்திவர்மனின் தேரைக் கண்ணுற்ருர்கள். அந்தத் தேருக்கு அருகிலே குதிரையில் சேனுபதி வில்லவன் உட்கார்ந்திருந்தான். அவனைச் சூழ்ந்திருந்த படைவீரர் கலைந்து பதுங்கினதைக்கண்டு வில்லவன் மனம் பொருமினுன்.

அந்நிலையில் முத்தரையன் தேரைச் செலுத்தியவனுய் வயிர மேகனின் தேரை அணுகினுன்.

தன்னுடைய தேருக்கு அருகில் நந்திவர்மனின் தேர் வந்து நிற்பதைக்கண்ட வயிரமேகன் திடுக்கிட்டான். சினத்தால் செருக்குடன் தேர்த்தட்டில் எழுந்து நின்ருன் சித்திரமாயன்.

"ஒற்றறிய ஆட்கள் இல்லை... ஸாம்ராஜ்யத்தின் முடிமன்னனே ஒற்றறிய வந்துவிட்டார்......" என்று பரிகாசமான வார்த்தைகளைக் கூறிப் பெருநகை செய்தான்.

முத்தரையன் கடுஞ்சீற்றத்துடன் எழுந்து நின்ருன் சித்திர மாயனுக்கு எதிராக.

"கணிகைமகனே,......மன்னவன் கட்டளையிட்டால் இப்போதே உன் நாவை அறுத்தெறிவேன்!... விரைவில் ஓடிவிடு!......உன்னைக் காப்பாற்றிக்கொள்ளத் திறமையற்றவன் நீ!...இந்த ஸாம்ராஜ்யத்துக்கே விஷம்போன்றவன் நீ. பல்லவ குலத்தின் களங்கமாகத் தோன்றியவன்! விரைவில் மறைவிடம் தேடிச்செல். இதைச் சொல்லவே நாங்கள் வந்தோம்' என்று இடித்துக் கூறினுன் முத்தரையன்.

சித்திரமாயன் கோபம் பொறுக்காதவனுய்த் தேரிலிருந்து நிலத்திலே குதித்தான். அவன் கைவாள் மின்னலென ஒளிவீசிப் பாய்ந்து சென்றது முத்தரையனை நோக்கி. தேர்த்தட்டில் மத்த யானைபோல் நின்ற முத்தரையன், சித்திரமாயனுல் வீசப்பட்ட வாளை, தன் கை வாளால் ஓச்சினுன்.

(தொடரும்)

—:—






## 24



*அன்புள்ள அம்மாவுக்கு அலமு அநேக நமஸ்காரம் செய்து எழுதியது.*

நல்ல வேளையாக மில் தகராறில் சமரஸம் ஏற்பட்டு பெரிய நாத்தனார் ஊர் போய்ச் சேர்ந்தாள். நாங்களும் பட்டணம் வந்து சேர்ந்தோம். அவள் ஊருக்குப்! போகும்போது நல்லதாக ஒரு புடவையும் இரண்டு ஜாக்கெட்டுகளும் வாங்கிக் கொடுத்தனுப்பினார் 'இவர்'. இது போதாதென்று மாமியார் தனியாக தனக்கு ஷஷ்டியப்த பூர்த்திக்கு வாங்கிக் கொடுக்கப்பட்ட புடவையையும் செலவுக்குக் கொஞ்சம் ரூபாயும் கொடுத்தனுப்பினாள். கொடுத்தனுப்பட்டும். யாரும் வேண்டாமென்று சொல்லவில்லை. வயிற்றில் பிறந்த பெண்ணாயிற்றே அபிமானம் இல்லாமல் இருக்குமா? ஆனால் கூடப்பிறந்த இன்னொரு பெண் கூடவே இருக்கிறதே. அது ஏதாவது நினைத்துக் கொள்ளுமே என்று எண்ணம் கொஞ்சமாவது இருக்கவேண்டுமே! சௌந்தரம் ஒன்றும் இவள் கொடுத்து வாங்கிக் கொள்ளக் காத்துக்கொண்டிருக்கவில்லை. இந்த வேளைக்குப் பெருமாள் புண்யத்தில் ஆம்படையான் நாலு காசு சம்பாதிக்கிறான். ஊரிலும் கொஞ்சம் நிலம் நீர் இருக்கிறது. இவள் கொடுத்து ஆக வேண்டுமென்பதில்லை. ஏதோ ஏழைப்பட்டது கொடுக்க வேண்டியதுதான். இருந்தாலும் லோகத்துக்காகவாவது கொஞ்சம் கண்ணைத்துடைத்தமாதிரி நடந்துகொள்ள வேண்டாமா? ரொம்ப பேருக்கு அதுதான் தெரிகிறதில்லை. அதெப்படியாவது போகட்டும். மகராஜி ஊர் போய்ச் சேர்ந்தாள். பெரிய பளு கழிந்த மாதிரி இருக்கிறது. அடீயம்மா! என்ன பாடு படுத்திவிட்டது! சின்ன வார்த்தைகளும், பெரிய வார்த்தைகளும், ஓரோர் நாளைக்கு அழுகை கூட வந்துவிடும் போயேன்!

அதெல்லாம் எப்படியாவது போகட்டும். இந்திராவைப் பற்றி ஒரே கலவரமாய் இருக்கிறதென்று எழுதியிருக்கிறாய். அதெல்லாம் முன் காலமாயிருந்தால் நீ கவலைப்பட வேண்டியது வாஸ்தவந்தான். இப்பொழுதெல்லாம் ஒவ்வொரு குடும்பத்திலும இது ஸர்வ ஸகஜமாய் நடைபெறும் ஸம்பவந்தானே! "எதிராத்து எச்சுமு" விஷயம் இதே மாதிரிதான் ஆய்விட்டது. எச்சுமுவுக்கு 20-வது வயதில் தானே கல்யாணம்.

வாஸு நல்ல படிப்பாளி. உலகமறிந்தவர். சீர்திருத்தப் பிரியர். வீண் பேச்சுக்களைக் காதில் போட்டுக்கொள்ளமாட்டார். ஆகவே இதற்காக நீங்கள் வீண் விசாரப்பட வேண்டாம். இந்திராவை உடனே இங்கே அழைத்துக்கொண்டு விடுங்கள். ஒரு நாலுநாளைக்கு இங்கே இருக்கட்டும். அடுத்த வாரம் வாஸு இங்கே வருவார். வந்ததும் அவருடன் இந்திராவை அனுப்பிவிடுகிறேன். நீங்கள் ஒன்றுக்கும் கவலைப்படவேண்டாம்.

விமலா இங்கேதான் இருக்கிறாள். இன்னொரு வேடிக்கை கேட்டாயா? விமலாவின் தகப்பனார், அந்த ஸப்ஜட்ஜ், ஸாயிபாபா பக்தராம். வியாழக்கிழமை தோறும் வீட்டில் தடபுடலாய் பஜனை நடக்குமாம். பஜனைக்கு ஏராளமான பெண்களும், ஆண்களும் வருவார்களாம். அப்பொழுது வெளியூர்களிலிருந்து பிரபல சங்கீத வித்வான்களையெல்லாம் வரவழைப்பாராம். விமலா அதிசயமாய்ச் சொல்கிறாள். ஒரு ஸமயத்தில் இவர்

பரம நாஸ்திகராய் இருந்தாராம். ஒரு கோவிலா, திருவிழாவா எங்கும் போகமாட்டாராம். தெய்வத்தின் மீது நம்பிக்கை கூடக கிடையாதாம். அப்படிக் கோவிலுக்குப் போனாலும் கீழேவிழுந்து சாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்ய மாட்டாராம். மேலெழுந்தவாரியாகக் கையைக் கூப்பி விட்டு லேசாகத் தாடையில் பட்டதும், படாததுமாய்ப் போட்டுக்கொண்டு வந்து விடுவாராம். அபபடிப்பட்டவர் நேற்று ஸாயிபாபா கொட்டகையில் கீழே விழுந்து ஸ்வாமிகளின் திருவடிகளை பற்றிக் கொண்டு இரண்டு நிமிஷ காலம் விடவே இல்லை. சென்ற வாரம் இங்கே ஸாயிபாபா சமாதித் திருவிழா வெகு விமரிசையாய் நடைபெற்றது. இவர் குடும்பத்துடன் சென்ற வாரம் முழுவதும் இங்கேயேதான் வந்திருந்தார். தினமும் மாலை வேளைகளில் ஸாயிபாபாவுக்கு அர்ச்சனை செய்து, 'ஸ்வாமிகளைச்' சேவித்துவிட்டு விபூதி, குங்குவம் வாங்கிக் கொண்டு வருவார். இந்த ஒரு வாரமும் எங்களுக்கு நல்ல பொழுதுபோக்கு. நல்ல கச்சேரிகள். அததுடன் நவராத்திரி வேறு சேர்ந்துகொண்டது. ஒரு நிமிஷங்கூட வீட்டில் தங்கியிருகக முடியவில்லை. சாயங்காலமானால இந்தப்பெண்கள் விதம் விதமாக 'டிரெஸ்' செய்து கொண்டு வீட்டுக்கு வீடு நுழைந்து புறப்படுவது பார்ப்பதற்கு மனதுக்கு ரம்யமாகத்தான் இருக்கிறது. ஒவ்வொரு பொம்மைக கடைக்கெதிரிலும், இந்த ஸ்திரீகளின் கும்பல், திருவிழா மாதிரியல்லவோ இருந்தது. பணம்தான் தண்ணீர்படும்பாடுபடுகிறது. பொம்மையொன்று ஐம்பது, நூறு என்று விற்கட்டுமே! யார் லட்சியம் செய்கிறார்கள்! உண்மையிலேயே வீட்டுக்கு வீடு ஒரு கொலுவும், இந்த நாகரிகப் பெண்களின் உத்ஸாகமும் ஒரு தனிச் சோபையைத்தான் அளித்தது.

இப்படிக்கு,
உன் அன்புள்ள
அலமு.



"இந்திரா வாஸு"


வட கரோலினாவில் இயற்கையில் உள்ள வசதிகளைப் புத்தி பூர்வமாகப் பயன்படுத்தி மணலைக்கூடக் கயிறாகத் திரித்து விடுகிறார்களாம்! அதாவது எந்த பூமி உற்பத்திக்கு லாயக்கில்லை யென்று கருதப்பட்டதோ அதே இடம் இப்போது பொன்னாக விளைகிறதாம். நவீன முறையில் அங்கு சாகுபடி நடப்பதைக் காட்டும் படம்.

# ஸ்ரீபூச்சி ஐயங்கார் தில்லானுக்கள்

காயகசிகாமணி,
அரியக்குடி, ராமானுஜ ஐயங்கார்
ஸ்வரப்படுத்தியது

[பாவச்செறிவும், கலையின் நளினமான நுட்சமங்களும் ஒருங்கே சேர்ந்து கவர்ச்சியை அளிக்கக்கூடிய பதங்கள், ஜாவளிகள், தில்லானுக்கள் முதலியன இன்று எந்த அளவில் வியாபகமாக விருக்கவேண்டுமோ அந்த அளவில் இல்லை. சிறந்த ஸாஹித்தியங்களைச் செய்து அவற்றை ஸங்கீதாபிமானிகளுக்கு சொத்துபோல் செய்து வைத்துள்ள ஸ்ரீ 'பூச்சி' ஐயங்கார் அவர்கள் தில்லானுக்கள் பல செய்திருக்கிறார். அவற்றில் ஒன்றுதான் கீழே தோன்றுகிறது.]

**பல்லவி**

4 4 4 4 4 4 4 4
தீம் தீம் தனன திரன தீம் தனன தனதிரன நாத்ருதானி தொம் த்ருதானித்ருத்ரு-

**அநுபல்லவி**

4 4 4 4 4 4
நாத்ரு த்ரு தானி தொம்த்ரு த்ரு தானி தனதிர தரன

4 4 4 4 4 4 4 4 4 4 4 4 4 4 4
த்ந த்ந த்ந தரு தீம் த்ந த்ரு த்ந தரு தீம் த்ரு த்ரு தீம் (தீம் தீம்)

**சரணம்**

3 3 3
தாமஸம்பு ஜேஸேதி ஸரி காதுரா மனோஹரா தாமி தாளதுரா

மகா ஜனக நாவின்ன பமுனுவினி கருணதோ ராரா ஸ்ரீனிவாஸா-

4 4 3 4
தாம் தகிட பரி நபத தகஜம் தரித ஸரிமா ஜனுத தகணக மகஸரிதிபரி

3 4 4 3 4 4 4
தகிட தகஜம் தரிக தணத ஜம்தகபம ததணஜம் திமி ரிகஸபா ததி கிணதொம் (தீம் தீம்)

# உங்கள் கால பலன்

-ராவ்-

## மேஷ ராசி

(அச்வனி, பரணி, கிருத்திகை முதல்பாதம் முடிய.)

இந்த மாதம் மேஷ ராசிக்காரர்களுக்கு ஏதேனும் அபிவிருத்தி ஏற்படவேண்டுமானால், ரொம்ப அதிகமாகப் பிரயாசைப் படவேண்டியிருக்கும். நல்ல நம்பிக்கைகள் செழிக்கும் வகையில் இம்மாதம் அமைந்திருப்பதும் உண்மைதான். ஆயினும் அபிலாஷைகள் சுலபமாக நிறைவேறாது. பிரபலஸ்தர்களோடு தொடர்போ அல்லது சகவாஸமோ செய்யும்படியான கட்டம் இந்த மாதத்தில் வாய்க்கக்கூடும். இத்தகைய சில தொடர்புகளாலும் பரிச்சயத்தினாலும் அனுகூலம் உண்டாகலாம்.

இந்த ராசியில் சிலருக்குக் கூட்டாளியாக விருந்து தொழில் நடத்தக்கூடிய நிலைமை ஏற்படுமென்றும் சொல்லலாம். பணம் சம்பந்தப்பட்டமட்டில் சிரமத்துக்குத் தகுந்த வருமானமிராது. சிறிது காலம் வரை குடும்ப சந்தோஷம் பூர்ணமாயிராது. மேற்கு திக்கில் தூரமாயுள்ள ஒரு இடத்துக்குப் பிரயாணம் போகும்படி சிலருக்கு நேரக்கூடும். ஒப்பந்த விஷயமாகவோ அல்லது உடன்பாட்டைப் பொறுத்தோ அபிப்ராயபேதம் ஏற்படக்கூடும். அல்லது சச்சரவு உண்டாகலாம். எண்ணெய் வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு இம்மாத முதல் பகுதியில் ஏதேனும் சற்று ஏமாற்றமேற்படலாம். செல்வ சம்பந்தமான இனங்களில் கொஞ்ச காலத்துக்கு அதிருப்திகரமான நிலைமை நிலவும். குடும்பத்தில் முதியவர்களின் ஆதிக்கத்திலிருந்து தப்பமுடியாது.

அக்டோபர் 20, 28, 31, நவம்பர் 6, 12, 14 தேதிகள் இந்த ராசிக்காரர்களுக்கு வசதிகரமான தினங்கள்.

## விருஷப ராசி

(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோஹிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் முடிய.)

6-வது இடத்திலுள்ள கிரஹங்களின் சேர்க்கை காரணமாக பண விஷயத்தில் விசித்திரமானதொரு நிலைமை விருஷப ராசிக்காரர்களுக்கு இந்த மாதத்தில் ஏற்படும். ஆகவே, அவ்விஷயத்தில் மிகவும் உறுதியோடும், கட்டுப்பாட்டுடனும் இருக்க முயற்சி செய்ய வேண்டும். அக்டோபர் மாதம் முடியும் வரையில் இந்த ராசிக்காரர்களுடைய சுபிட்ச முன்னேற்றம் தடைபடும். அதன் பின்னர் கொஞ்சம் கொஞ்சமாகத் திருப்தி ஏற்படும் முறையில் அபிவிருத்தி ஏற்படும். காதல், காதல் சம்பந்தமாகவுள்ள விவகாரங்கள் ஆகியவற்றிற்குச் சாதகமான காலம் இது. இதில்லையானால் கிரஹங்கள் குறிக்கும் பலன் வேறு. அதாவது தொழிலில் கூட்டாகச் சேர நேரலாம். அதன் மூலம் செழிப்பான நிலைமை உண்டாகலாம். இரண்டாம் பகுதியிலேயே பண வசதிகள் ஏற்படும் என்பதற்கான அறிகுறிகள் காண்கின்றன. உறவினர் ஒருவருடைய தேக நிலைமை பற்றி வரும் கெட்ட செய்தியினால் மன நிம்மதி பாதிக்கப்படும். இந்த மாதத்தில் இந்த ராசிக்காரர்கள் தேகாரோக்யத்தைக் கவனித்துக்கொள்ள வேண்டும். முக்கிய கிரஹமான சனி 3-வது வீட்டில் நல்ல இடத்தைப் பெற்றிருப்பதால் சிரமம் அதிகமில்லாமல் இந்த ராசிக்காரர்களுடைய விஷயங்கள் அனைத்தும் பொதுவாக நன்கு உருவடையும்.

அக்டோபர் 20, 25, 26, நவம்பர் 6, 12, 15 தேதிகள் இவர்களுக்கு நல்ல தினங்கள்.

1946-ம் வருஷம் அக்டோபர் மீ 15-ந் தேதி முதல் நவம்பர் மாதம் 15-ந் தேதி வரையில் பொதுவாக ஒவ்வொரு ராசிக்காரர்களுக்கும் பலன்கள் கொடுக்கப்பட்டுள்ளது. ராசியைத் தெரிந்துகொள்வதற்கு உதவியாக முறையே நக்ஷத்திரங்களும், பாதங்களும் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன.

## மிதுன ராசி

(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்வஸு 3-ம் பாதம் முடிய.)

மிதுன ராசிக்காரர்களுக்கு 5-வது இடத்தில் உள்ள கிரஹ நிலைமையினால் இந்த மாதம் பணம், குடும்பம் முதலிய விஷயங்களில் மன நிலைமை பாதிக்கப்படும்; பண வசதி சற்று குறைவுபடும். இந்த மாதத்தின் இரண்டாம் பகுதியில் அனுகூலம் உண்டு பண்ணக்கூடிய முறையில் திடீரென ஓர் மாறுதல் ஏற்படலாம். அது இடையேயிருந்த கஷ்டங்களை விலக்கி சுபிட்சத்தைத் தரும். இவையெல்லாம் இருந்தும்கூட இந்தமாதம் முழுதும் நிலைமைசாவதானமாக ஒரே சீராக இராது. உறவினர்கள் சாபத்துக்குப்பாத்திரமாக நேரிடும். தப்பு அபிப்பிராயங்கள், சண்டை சச்சரவுகள் இவையெல்லாம் கணப்பொழுதில் ஏற்பட்டுவிடும். மனது எப்போதும் எதைப்பற்றியேனும் சிந்தனையில் ஈடுபட்டு நிற்கும். குழந்தைகளின் தேகாரோக்கியக் குறைவாலும், கிலேசமேற்படும். வயிற்று விஷயத்தில் உஷாராயிருக்க வேண்டும்: இல்லையானால் இதையொட்டி கோளாறு ஏற்படலாம். இந்த ராசிக்காரர்களுக்கு நன்மைபயக்கக்கூடிய முறையில் புதியதொரு சிநேகிதர் இம்மாதத்

தில் ஏற்படுவார் ஆனால், இந்த நட்பு நிரந்தரமாக நீடித்திராது.

அக்டோபர் 19, 28, நவம்பர் 5, 11 14, தேதிகள் இவர்களுக்கு நன்மை தரும் நாட்கள்.

## கடக ராசி

(புனர்வஸு கடைசி பாதம் முதல் புஷ்யம், ஆயில்யம் முடிய.)

வீட்டு விஷயங்களையும், குடும்ப அலுவல்களையும் ஒன்று பிணைக்கும் முறையில் இம்மாதம் கடக ராசிக்காரர்களுக்கு அமைந்திருக்கிறது. இந்த இரண்டும் இதர அம்சங்களைவிட முதல் ஸ்தானத்தை வகிக்கும். சென்ற மாதத்தில் இந்த ராசிக்காரர்கள் மோசமான கிரஹ நிலைமையால் சங்கடப்பட்டிருப்பார்கள். இம்மாதம் குடும்பத்திலுள்ள அபிப்ராய பேதங்கள் சமனமடையும். பிறருடைய உதவி காரணமாகப் பணத் துறையிலுள்ள வசதிக் குறைவுகள் விலகும். இம்மாத இரண்டாம் பகுதியில் செய் முயற்சி பயன் பெறும். உத்தியோகத்தில் சந்தோஷகரமான மாறுதல் ஏற்படவேண்டுமென்ற நோக்கம் முற்றி பதற்றப்படும்படியும் இருக்கும். இம்மாத இரண்டாம் பகுதியில் இது வெற்றி பெறும். குழந்தைகளில் யாரேனும் ஒருவரைப்பற்றிக் கவலை உண்டாகும். இருப்பினும் அபாயம்இருப்பதாகச்சொல்லமுடியாது. ஓரோர் சமயத்தில் கைமாற்றாகக் கடன்வாங்கும் அவசியம் ஏற்படும். இன்னும் சிலர் விஷயத்தில் பழைய வியாபாரத் தொடர்புகளைப் புதுப்பித்துக்கொள்ள நேரலாம். இதனால் சகாயமும் ஏற்படும். ஜீரணசக்திக் கோளாறால் பொதுவாகத் தேகாரோக்கியம் பாதிக்கப்படலாம்.

அக்டோபர் 20, 22, 31, நவம்பர் 2,4,7, 11, தேதிகள் இந்த ராசிக்காரர்களுக்கு உகந்த தினங்கள்.

## ஸிம்ம ராசி

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம்முடிய.)

ஸிம்ம ராசிக்காரர்களுக்கு இம்மாத முதல் பகுதி உத்தியோகத்திலோ அல்லது குடும்பத்திலோ மன அமைதி கொடுக்காது. இரண்டாம் பகுதியில்தான் குடும்பத்தில் மாறுதலும், பணவிஷயத்தில் வசதிகளையும் திருப்திகரமான முறையில் எதிர்பார்க்க முடியுமென்பதற்கான அறிகுறிகள் காண்கின்றன. அக்டோபர் 31-ந் தேதி வாக்கில் இந்த ராசிக்காரர்களுக்குப் பயன்தரும் வகையில் தனவந்தர்களோடு சந்தித்துப் பேசும் சந்தர்ப்பம் வாய்க்கலாம். உறவினர்களிடமிருந்து எதிர்பாராத ஆதரவு கிட்டும். இம்மாத மத்தியில் இரண்டு தினங்கள்வரை தேகாரோக்கியம், திடீரென்று பாதிக்கப்படும். தூரத்திலிருந்து முக்கியமானதொரு செய்தி வருவதே இம்மாதத்தில் குறிப்பிடத்தக்க பிரதான அம்சம். இந்த ராசியில் சிலருக்குத் திடீரென்று பிரயாணம் செய்வதற்கான அவசியமேற்படலாம். கொண்டுள்ள நம்பிக்கைகள் இம்மாதம் எளிதில் நிறைவேறாது. லேஹ்யங்கள் செய்துகொண்டு செயலில் ஈடுபடாமலிருப்பதே உசிதம்.

சில அபூர்வ இனங்களில் இந்த ராசிக்காரர்களுக்கு இரண்டாம் பகுதியில் வாஹனப் பிராப்தி கிட்டும். அதற்குக் காலநிலைமை சாதகமாயிருக்கிறது. தொழிலில் உள்ளவர்களாயின், இரண்டாம் பகுதியில் கூட்டாகச் சேர்ந்து வியாபாரம் நடத்த நிலைமை இடம் கொடுக்கும்.

அக்டோபர் 19, 28 நவம்பர் 1, 4, 6, 14 தேதிகள் இவர்களுக்கு நல்லவை.

## கன்யா ராசி

(உத்திரம் 2-ம் பாதம்முதல் ஹஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய.)

பொதுவாகக் கன்யா ராசிக்காரர்களுக்கு இம்மாத கிரஹங்களின் போக்கு சுலபமானதாகவும் அதிருஷ்டகரமானதாயும் அமைந்திருக்கிறது. சென்ற மாதம் தடைபட்டுப்போயிருந்த விஷயங்கள் எல்லாம் அநேகமாக எதிர்ப்புகள் இருந்தபோதிலும்கூட சந்தோஷகரமாகக் கைகூடும். வாழ்க்கையில் முன்னேற்றம், செழிப்பு ஆகிய துறைகளில் செய்யும் முயற்சிகள் அடுத்த மாதத்திலிருந்து ஆரம்பமாகிறது. சிக்கல்கள் தடைகள் இவற்றிலிருந்து விடுபட்டிருப்பதுடன், ஒரு சமயத்தில் ஒரு காரியத்தை மட்டும் கவனித்துச் செய்து, முடிப்பது நலம். பக்க வட்டாரத்தில் நடக்கும் வம்பளப்புகளுக்கெல்லாம் செவி சாய்க்கக்கூடாது. கூடுமானவரையில் எதிலும் திட்டமாகத் தலையிடாதிருக்க வேண்டும். இம்மாத இரண்டாம் பகுதியில் உறவினர் ஒருவருடன் தகராறு ஏற்படலாம். இல்லையானால், அவ்வுறவினரிடமிருந்து கெட்ட செய்தி வரும். இந்த மாதத்தில் ஓர் பிரயாணமும் ஏற்படக்கூடும். மனது ரொம்ப பளுவாயிருக்கும். நவம்பர் 7-ந்தேதி வாக்கில் ஏதேனும் அதிருஷ்டகரமான சம்பவம் நடக்கலாம்.

அக்டோபர் 23, 27 நவம்பர் 5, 10, 12 தேதிகள் இவர்களுக்குச் சிறந்தவை.

### 17-10-'46-ல் உள்ள கிரஹ நிலை

| | | | |
|---|---|---|---|
| | | ராகு உரானஸ் | சந்திரன் |
| | | | சனி |
| | | | |
| | கேது சுக்கிரன் | புதன் சூரியன் குரு செவ்வாய் | நெப்டியூன் |

## துலா ராசி

(சித்திரை, 3-ம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய.)

துலா ராசிக்காரர்களுக்கு இந்த மாதம் கடுமையான பொறுப்புகளை ஏற்க நேருவதுடன், சொந்த விஷயங்களிலெல்லாம் கவலைகள் இருந்து வரும். தாமதமாயிருந்தாலும் சரி, எதிர்ப்புகளிருந்தாலும் சரி பண வசதிகள் சுலபமாகவேயிருக்கும். வியாஜ்ஜியவிவகாரங்கள் ஏதேனும் இருப்பின், இம்மாதம் அவற்றிற்கு ஏற்றதாயில்லை. பிறரோடு தப்பு அபிப்ராயமோ அல்லது தகராறோ நேராமல் பார்த்துக்கொள்ளவேண்டும். இம்மாத இரண்டாம் பகுதி முன்வாரத்தைவிட அதிருஷ்டகரமானது. எதிர்பாராது பணம் வந்து சேரும். இதனால் சந்தோஷமும் ஏற்படும். ஸ்திரீகளின் நட்பு உண்டாகும். இதற்குச் சாதகமான நிலைமையை இம்மாதம் உண்டாக்கிக் கொடுக்கிறது. பெரிய மனிதர்களுடைய தொடர்பு ஏற்பட்டு, அவர்களுடைய நல்லுணர்ச்சி காரணமாக அனுகூலம் உண்டாகுமென்று தோன்றுகிறது. வியாபாரிகள் இம்மாத இரண்டாம் பகுதியில் ஹேஷ்யபூர்வமான இனங்களில் கவனம் செலுத்துவது நலம். வெளியார் உதவியும் உண்டு.

அக்டோபர் 18, 28, நவம்பர் 3, 6, 12, 15 தேதிகள் இவர்களுக்குச் சிரேஷ்டம்.

## விருச்சிக ராசி

(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை)

விருச்சிக ராசிக்காரர்களின் விவகாரங்கள் எல்லாம் இம்மாதம் சங்கடமான கிரஹங்களின் வீட்சண்யத்திலிருக்கின்றன. சச்சரவுகள் அபிப்ராய பேதங்கள், ஓரளவு பண வசதிக் குறைவுகள் இவையெல்லாம் மேற்படி கிரஹ நிலைமையால் சம்பவிக்கும். இந்த மாதத்தில் உத்தியோக சம்பந்தமான கவலைகளும் ஏற்படக்கூடும். இந்த ராசிக்காரர்கள் தொழில் நடத்துபவர்களானால், அவர்களுடைய விஷயங்கள் எல்லாம் ஆங்காங்கே முடங்கிக் கிடக்கும். மனச் சுணக்கமும் உண்டு. தொலைவிலுள்ள நண்பர்களிடமிருந்து செய்திகள் வரும். வாழ்க்கையின் வெற்றியை மறைத்துக்கொண்டிருந்த நிச்சயமற்ற தன்மை இம்மாத இரண்டாம் பகுதியிலிருந்து விலகும். அதன் பிறகு சூழ்நிலைமை பிரகாசமடையும். எதிர்கால நிலைமையில் நம்பிக்கை பிறக்கும். பணத் துறையில் உள்ள வெற்றிகரமான அம்சங்கள் எல்லாம் இந்த ராசிக்காரர்களுடைய வாழ்க்கையை நோக்கித் திரும்பும். இதனால் சங்கடமே சிறிதுமின்றி மாதப்போக்கு வெகு சுலபமாக விளங்கும்.

கொஞ்சநாட்களுக்கு தேகாரோக்கியமின்மையால் மனம் பாதிக்கப்படும். இந்த ராசிக்காரர்களுக்குப் புத்திரர் இருந்தால், அப்புதல்வருடைய விஷயங்கள் அதிருப்திகரமான கிரஹ நிலைமையில் இருக்கின்றன. செலவு அகோரமாகப் பெருகும். இதுகண்டு திகைக்கும்படியும் நேரும்.

அக்டோபர் 26, 27, 31, நவம்பர் 5, 8, 9, 12 தேதிகள் இவர்களுக்குத் தரமான சுப தினங்கள்.

## தனுர் ராசி

(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய.)

தனுர் ராசிக்காரர்களுக்குப் பொதுவாக இம்மாதம் அதிருஷ்டகரமானதென்றே சொல்லவேண்டும். பந்தயம்போன்ற இனங்களில் ஈடுபட்டாலும் சரி, படாவிட்டாலும் சரி; பணம் வெகு சுலபமாக வந்துகொண்டிருக்கும்; செலவும் ரொம்ப அதிகமாயிராது. இம்மாத முதல் பகுதியிலும், குடும்பத்திலும் வெளியிலும் சந்தோஷகரமாயிருக்கும். உத்தியோகத்தில் நல்ல லாபமுண்டு. அல்லது கொண்ட அபிலாஷை பூர்த்தியடையும். சிநேகம், தாம்பத்தியம் அல்லது வியாபாரம் இவற்றிற்கு இம்மாதம் வெகு சிரேஷ்டம். முதலாளிகளாயின் வியாபாரம் மிகுந்து லாபம் செழிக்கும். சாதகமான நிலைமைகள் உண்டாகும். ஊழியராயின், நல்ல சம்பாத்தியம் உண்டு. இம்மாத மத்தியிலோ அல்லது நவம்பர் துவக்கத்திலோ நிலைமை இந்த ராசிக்காரர்களுக்குச் சாதகமாயிராது. ஏமாற்றமோ அல்லது பந்தயம் போன்றுள்ள இனங்களில் நஷ்டமோ ஏற்படும்.

அக்டோபர் 21, 30, நவம்பர் 9 12 தேதிகள் இவர்களுக்கு அதிருஷ்ட தினங்கள்.

## மகர ராசி

(உத்திராடம் 2-ம் பாதம் முதல் திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய.)

உத்தியோகம், வெளி இடங்கள், பண விஷயங்கள், குடும்பம் ஆகிய அனைத்திலும் இம்மாதம் மிகத் தெளிவான அனுபவங்களை உண்டாக்கும் மாதம். மகர ராசிக்காரர்களுக்கு நண்பர்களும், ஆதரவு கொடுக்கக்கூடியவர்களும் இந்த ரசிக்காரர்களுக்குப் பலமாயிருப்பர். ஏதேனும் ஒரு விஷயத்தை முன்னிட்டுப் பிறரோடு சேர்ந்திருக்கவேண்டுமென்று உணர்ச்சி உண்டாகும். வெளி உலகத்திலுள்ள அந்தஸ்து, தொழில் துறையில் உள்ள நலன்கள், மதிப்பு, செல்வச் செழுமை ஆகிய இனங்கள் எல்லாம் சாதகமான கிரஹ நிலைமையிலிருக்கின்றன. வெற்றி தரும் வகையில், புதிய முயற்சியில் ஈடுபடலாம். இதை முன்னிட்டு ஒரு பிரயாணத்தை மேற்கொள்வது அத்தியாவசியமாகப் போகும். இம்மாத இரண்டாம் பகுதி முதல்பகுதியைவிட அதிக அதிருஷ்டகரமானதாக விளங்கும். இந்த மாதத்தில் அக்டோபர் 24-ந் தேதிக்குப் பிறகு எதிர்பாராது அதிருஷ்டம் அடிக்கக்கூடும். செல்வாக்குள்ள நண்பர்களோடு சேர்ந்துகொண்டு இம்மாதத்தை நன்கு பயன்படுத்திக்கொள்ளவேண்டும். முதலீடு, போன்றவற்றிற்கு இது சிலாக்கியமான மாதம்.

அக்டோபர் 17, 26, 30 நவம்பர் 4, 12, 13, தேதிகள் இவர்களுக்கு யோக தினங்கள்.

## கும்ப ராசி

(அவிட்டம் 3-ம் பாதம் முதல் சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய.)

கும்பராசிக்காரர்களுக்குப்பொதுவாக இம்மாதத்தில் அதிருஷ்டகரமான சக்திகள் மேலோங்கி இருக்கின்றன. இது குடும்பத்தி

லும் முக்கியமாக உத்தியோகத்தி லும் பிரதிபலிக்கும். அடிக்கடி ஏதாவது தேக சுகம் பாதிக்கப் படும். தொழில் சம்பந்தமான திட் டங்கள், எண்ணங்கள் இவையெல் லாம் இம்மாதமுதல் பகுதிக்கு பின் னர் வெற்றிகரமாக நிறைவேறும். சுயேச்சையாகவுள்ளவர்களானல், புதிய முயற்சியில் கவனம் திரும் பும். இல்லையேல் வேலை மாறுதல் இருக்கும். அதுவும் கிடையாதென் ருல், எஜமானருடைய பாராட்டு கிடைக்கும், பண பலம் இந்த ராசிக்காரர்களுக்குச் சாதகமா யிருக்கும். புதிதாகச் சிலபொறுப்பு கள் சுமத்தப்படலாம். வழக்கத்தை யும் விட வேலை அதிகமாயிருக்கும், என்ருலும் அது உல்லாசமான தாகவேயிருக்கும். குழந்தைக ளுடைய தேக சுகம் அடிக்கடி பாதிக்கப்படும். மிகவும் உபாய மான அளவில் பந்தய விவகாரங் களில் ஈடுபட்டால், லாபம் கிடைக் கலாம். இந்த ராசிக்காரர்கள் செல் வாக்கில் பெரியவர்களாகவிருந்து ஆதரவு தருபவர்களைச் சந்திக்கவும் கூடும்; இதனல் வாழ்க்கை நலன் கள் முன்னேற்றமடைய வழி உண்டு.

அக்டோபர் 19, 26, 28, நவம்பர் 8, 10, 12, தேதிகள் இவர்களுக்குத் திருப்திகரமான தினங்கள்.

## மீன ராசி

(பூரட்டாதி, 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய.)

உணர்ச்சியைப்பற்றியுள்ள விஷ யங்களெல்லாம் இம்மாதம் மீன ராசிக்காரர்களுக்குச் சங்கடமான நிலைமையிலிருக்கும். இம்மாதமுதல் பகுதியில் 3-வது இடத்திலும் 5-வது இடத்திலும் உள்ள கிர ஹங்களின் நிலையே இதற்குக் காரணம். செல்வ விஷயங்களுக்கு இம்மாதம் திருப்திகரமானதல்ல. வயிற்றுக் கோளாருல் பொதுவாக தேகாரோக்கியம் பாதிக்கப்படும். எதிர்காலத்தைப் பொறுத்துள்ள மனேபாவம்மகிழ்ச்சிகரமாயிராது. விரோதிகளால் இந்த ராசிக்காரர் கள்மீது பழி சுமத்தப்படும். நெப் டியூன் கிரஹத்தின் தன்மையும் அனுசரணையாயில்லை. சாத்தியமா னல், பிரயாணம் செய்யாமலிருப் பதுநலம். நவம்பர் 6-ந் தேதிக்குப் பின்னர் சகல விஷயங்களிலும் பிரகாசமான நிலைமை ஏற்படும். இம்மாத இரண்டாம் பகுதியில் தொழிலைப்பற்றிய புதிய சிந்தனை கள் அல்லது உத்தியோகப் பிரச் னையைப் பொறுத்து, புதிய அபி லாஷைகள் உதிக்கும். இதனல் நம் பிக்கையும் மகிழ்ச்சியும் உண்டா கும். இரண்டாம் பகுதியில் நிச்சய மாக பணவிஷயத்தில் அபிவிருத்தி ஏற்படும், மனேபாவத்தை உல் லாஸமாக வைத்துக்கொண்டிருக்க வேண்டுமேயன்றி, சுணங்கித் துவண்டுவிடக்கூடாது.

அக்டோபர் 21, 28, 30 நவம் பர் 3, 9, 12 தேதிகள் இவர் களுக்கு அனுகூல நாட்கள்.



அமெரிக்கா, வட அலாபாமாவிலுள்ள 'வீலர் அணை'யின் தோற்றமே மேலே காணப்படும் படம். 1 மைல் நீளம் உள்ளது. இதன் உதவியால் 129,600 கிலோவாட்ஸ் மின்சார விசை விநியோகமாகிறது.

# "கீரையின் கதை"

 தங்கம்மாள் பாரதி 

"அரைக் கீரை வேண்டுமா அரைக்கீரை" யென்று கூவினாள் கீரைக்காரி பாட்டி. கீரை வாங்க விரைந்து சென்றாள். அம்மாவுக்குத் தினமும் கீரை சமைப்பது அத்தனை நாகரீகமாய்த் தோன்றவில்லை. "தினம் என்ன ஒரே கீரைமயமாயிருக்கிறதே! உங்கள் பிள்ளையை மார்க்கெட்டுக்குப் போகச்சொன்னால் ஏதாவது கீரைதான் வாங்கி வருவார். அதில்தான் 'வைடமின்' அதிகமிருப்பதாக காரணம் கூறுவார். மாடுபோல் தினம் தழைகளை மெல்லுவது இந்த வீட்டில் வழக்கமாய் விட்டது" என்று முணுமுணுத்தாள். பாட்டி இதைக் கேட்டு "ராஜம் இப்படி எங்கள் மேல் குறை கூறாதே! அம்பிகையின் கருணை வெள்ளத்தில் உண்டானதால் அரைக்கீரைக்கும், அகத்திக் கீரைக்கும் விசேஷ குணம் உண்டு" என்றாள் பாட்டி. என்ன விசேஷ குணம் என்று கேட்டேன் நான். வியாதியை அகற்றும் மூளையைக் குளிரப் பண்ணும். வயிற்றில் நிபாக்கினியை யுண்டாக்கும், உடம்புக்கு, வேண்டிய சத்து கீரைகளில் நிரம்பியிருக்கின்றன.

நான்:—பாட்டி இந்தக் காரணங்கள் எல்லாம் எங்களுக்கும் தெரியும். அம்பிகையின் கருணை வெள்ளத்தில் எப்படி யுண்டாயிற்று அரைக்கீரை. அந்தக் கதையைச் சொல்லு.

நமது முன்னோர் மிகுந்த மதப்பற்றுள்ளவர்கள். அவர்கள் தாம் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் கடவுளுக்கு அர்ப்பணமாகவே செய்வார்கள். அவர்கள் செய்யும் யாகயக்ஞ கர்மங்களினால் தேவர்கள் திருப்தியடைவார்கள். தேவர்களிடம் எப்போதும் பகைமை கொண்ட அசுரர்களின் குருவான சுக்கிராசாரி தேவர்களைத் துன்புறுத்த ஒரு வழி தேடினார். "மானிடர் செய்யும் நித்ய கர்மானுஷ்டத்தினாலல்லவா தேவர்கள் இத்தனை சந்தோஷமடைந்திருக்கிறார்கள்? இதோ நொடியில் அவர்களை துன்பக்கடலில் ஆழ்த்துவேன்" என்று கூறி கொடிய தவம் செய்தார். பிரம்மாவும் அவர் எதிரில் தோன்றினார். "என்ன வரம் வேண்டும்" எனவும் "மனிதர்களுக்குத் தெய்வ நம்பிக்கை குறைய வேண்டும். அதனால் அவர்கள் நித்ய கர்மம் தவறுவார்கள். அதுதான் எனக்கு வேண்டும்" என்றார். சரியென்று கூறி மறைந்தார் பிரம்மா. மானிடர் செருக்குற்றலைந்தனர். தினசரி செய்யும் கர்மங்கள் யாவும் நின்று போயின. தேவர்கள் எல்லாம் தங்களுக்கு ஆகாரம் இல்லாமல் துடி துடிக்கலாயினர். அங்கும் அவர்களுக்கு உணவுப் பஞ்சம் இவ்விதமாக ஏற்பட்டது. தேவரையும் துன்ப நிழல் தொடர்ந்தது. தேவர்களில் ஒரு விவேகி இதையறிந்தான். அவன் தேவர்களை அழைத்து சகோதரர்களே! துன்பமூண்ட சமயம் பேசாமல் நிற்கிறீர்களே, தன் பலம், எதிரி பலம் தெரியாமல் வேலை செய்யக்கூடாது. சுக்கிராசாரியின் சதியினால் நமக்கு இந்த ஆடத்து ஏற்பட்டது. நமது அன்னையாகிய பராசக்தியிடம் செல்வோம். அவள்தான் இந்த விபத்திலிருந்து நம்மைக்காப்பாள். 'இடுக்கண் வந்துற்ற வேளையினில் என்னைத் துதியுங்கள் என்றாரே,' ஆதலால் அன்னையின் பாத கமலங்களில் பணிவோம்' எனவும் அமரர் யாவரும் அதுவே சரியென்று துணிந்து ஹிமாலயத் தடத்திற்குச் சென்றார்கள். அப்படி போகும் வழியில் மிக துன்புற்றார்கள். உள்ளும் புறமும் வாடினார்கள். அப்படியேபிடுங்கியகீரைத்தண்டைப்போல் கீழே படுத்தார்கள். தேவிதனதுபுத்திரர்களின் நிலையையுணர்ந்தாள், அவள் மனதில் கருணைப் பிரவாகம் எழுந்தது. அது கண்ணின் வழியே வழிந்தோடியது. அம்பிகையின் அருள் பார்வையினால் அயர்ந்திருந்த யாவரும் புத்துணர்ச்சி பெற்று எழுந்தனர். கண்ணீரருவியின் ஆறு பெருக்கெடுத்தோடியதால் மலைப்பிரதேசம் முழுதும் பசுமை தோன்றியது. அரைக்கீரையும் மற்றும் அதன் சகோதர வர்க்கங்களான அநேகவித கீரைகளும்முளைத்துப்பலம்பெற்றன. அமுதமுண்டதால் சாகா வரம் பெற்ற அமரர் புதிதாக முளைத்தெழுந்த கீரைகளைப் புசித்துப் பசி தீர்த்தனர். அமரர் பசி தீர்த்த அருமருந்தானபடியால் கீரை உடம்புக்கு மிகவும் ஏற்ற பொருளாய் கருதப்படுகிறது. சிறிது காலத்தில் சக்தியின் அருளால் தேவலோகத்துப் பூசலும் நின்றது. தேவரும் மானிடரும் இன்புற்றனர். இதுதான் அரைக்கீரையின் கதை" என்றாள் பாட்டி. முற்றத்தில் நின்ற கீரைத் தண்டு காற்றினால் தழைகளை அப்படியும் இப்படியும் அசைத்துக் கொண்டுநின்றது. "பாட்டியின் கதையைக் கேட்டு கீரைத் தண்டு ஆனந்த நடனம் ஆடுகிறது" என்றேன் நான். கீரையுடன் உள்ளே நுழைந்த அப்பா, இந்தக் காலத்தில் எல்லோருமே பரத நாட்டிய மோகம் பிடித்தாடுகிறார்களல்லவா. கீரைத் தண்டு மட்டும் இதற்கு விலக்காயிருக்க முடியுமா? என்றார்.

ஆம் ஆம் என்றேன் நான். பாட்டி பூஜையில் அமர்ந்தாள். அம்மா சமையலில் முனைந்தாள்.




52

—பி. ஸ்ரீ.—

## தோல்வியே வெற்றி

★

வேடன் சிரிப்பு அர்ஜுனனுக்குக் கோபமூட்டியது. வேட்டைச் சட்டத்தின்படி அடிபட்ட பன்றி தனக்கே உரியது என்று அர்ஜுனன் படபடப்பாய்ப் பேசியதும், வேடன் மெதுவான வார்த்தையால், "ஓ, வீர! காட்டுச் சட்டம் எனக்குத் தெரியாததா, உனக்குத் தெரியப்போகிறது? நாம் ஆளும் காட்டிலே வசிக்கின்ற மிருகங்களெல்லாம் நமக்கே உரியன. ஓ தவசியே! நீ இங்கு வந்து வசிப்பதற்கு என்ன உரிமை இருக்கிறது உனக்கு?" என்று சொல்லிக்கொண்டே நகைத்தான். அதற்கு அர்ஜுனன் அக்கினிக்கொப்பான சில பாணங்களையும் காண்டீபத்தையும் தூக்கிக் காட்டி, "இவை தந்த உரிமை கொண்டு அக்கினி போல இப்பெரிய காட்டில் நான் வசிக்கிறேன். இப்பேர்ப்பட்ட என்னால் கொல்லப்பட்டது இங்கே பன்றி உருவத்துடன் என்னைக் கொல்ல வந்த இந்த ராட்சஸ ஜந்து" என்று பதில் சொன்னான்.

### நெருப்பும் சிரிப்பும்

வேடன் சொல்லலானான்: "நாம் ஆளும் காட்டிலே இத்துஷ்டப் பன்றியை உனக்கு முந்தியே பாணங்களால்அடித்த நமக்கு உரிமையில்லாமல் பரதேசியாகிய உனக்கு என்ன உரிமை இருக்கமுடியும்? உயிரில் உனக்கு ஆசையிருந்தால் ஓடிப் போகலாம். இதோ இடிகள் போல் முழங்கி நெருப்பைக் கக்கிவரும் சரங்களைக் கோத்துவிடப் போகிறேன். எங்கே எடு மறுபடியும் உன் பாணங்களை!" என்றான். அர்ஜுனன் பதில் சொல்லாமலே வேடனைப் பாணங்களால் அடித்தான். பாம்பு போன்ற வடிவமுள்ள பாணங்கள் சீறி வந்து மழை போலப் பெய்தன.

அம்மழையைச் சந்தோஷமாகத் தாங்கிக்கொண்டு மலை போல் அசைவற்றுக்காயம்படாமல் நின்றான் வேடன். அப்படி நின்றுகொண்டே அர்ஜுனனை நோக்கி, "ஐயோ! பாவம் சரமாரியாகப்பேசினாய், சரமாரி பொழிந்தாய்; சொல்லம்பும் வில்லம்பும் வீண் போயினவே!" என்று சிரித்தான்.

அர்ஜுனன் ஒரு கோபச் சிரிப்புச் சிரித்து, "இதோ இந்தக்கூர்மையான பாணங்களால் உன்னை நீ ஆளும் காட்டிலிருந்து யமனாளும் நாட்டுக்கு அனுப்பிவிடுகிறேன்!" என்று வீரவாதம் செய்து, நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் பாணங்களை ஏவினான். அம்பருத்தூணியிலும் அம்புகள் அற்றுப் போயின. பயன் ஒன்றும் இல்லை. சிறிது பயமும் அடைந்தான் அர்ஜுனன்.

### புன்னகை-தோல்வி-பூஜை

அந்நிலையில் இன்னது செய்கிறோம் என்று தெரியாமலே வில் முனையாலும் நாண்கயிற்றாலும் வேடனைப் பிடித்திழுத்து, வஜ்ராயுதம்போன்ற முஷ்டிகளால் குத்துவிட்டான் முதுகிலே. வேடன் சிரித்துக்கொண்டே வில்லைப் பறித்துக்கொண்டான், அர்ஜுனன் கத்தியும் கையுமாக எதிர்த்துத் தலையில் ஓங்கி வெட்டப் பார்த்தான். கத்திக்குத்தான் சேதம்; தலையில் ஒரு சிறு காயமும் ஏற்படவில்லை. அர்ஜுனன் மரம் மட்டைகளையும் கற்களையும் வீசியெறிந்தான். தன்மேல் மலர்கள் விழுவதுபோல் எண்ணி வேடன் புன்னகை புரிந்தான்.

கடைசியாக இருவரும் கைக்குத்துச் சண்டையில் மூண்டனர். அச்சண்டையில் வேடன் மிஞ்சிவிட்டான். அர்ஜுனன் மயங்கி விழுந்தான். அந்நிலையில் வேடன் சிவ வேடத்துடன் காட்சியளிக்கக் கண்டான். அர்ஜுனனுக்கு ஆச்சரியமாயிருந்தது.



அறிவு வந்து எழுந்ததும் அர்ஜுனன் மண்ணால் ஒரு சிவ லிங்கத்தைப் பிடித்து வைத்துஅதை மலர்களால்தூவி வழிபட்டு, "ஓ! சிவ வேடமே! வேடனை வெல்ல அருள் புரிவாய்" என்றுபிரார்த்தித்தான். பிறகு வேடனை நோக்கியதும் தான் சிவபிரானுக்கு அர்ச்சித்த மலர்களெல்லாம் வேடன் மீது இருக்கக்கண்டான்.

## காட்சியும் கருணையும்

மயல் நீங்கி மனம்தெளிந்தது. வேடன் காலில் விழுந்தான் அர்ஜுனன். கம்பீரமான குரலில் மேகமண்டலத்திலிருந்து பேசுவது போல் வேடன் பேசினான்: 'ஓ, ஓ, அர்ஜுனா! உன் ஒப்பற்றவீரம்கண்டு மகிழ்ந்தோம். உன் விருப்பம் நிறைவேறும்' என்று சொன்ன வேடனை இப்போது பார்க்கக் கண்ணும் கருத்தும் ஒருங்கே கூசின. வேடன் ஜடாதரனாகவும் கங்காதரனாகவும் உமாதேவியுடன் காட்சியளித்தான்.

அர்ஜுனன் தன் குற்றத்தைப்பொறுக்கவேண்டுமென்று பிரார்த்தித்துச் சரணயடைந்தான். சிவபெருமான் சிரித்துக்கொண்டே அர்ஜுனனைத் தழுவிக்கொண்டு, தாம் பறித்துக்கொண்ட காண்டீவத்தைத் திருப்பிக்கொடுத்தார். பிறகு பாசுபதாஸ்திரம் என்ற தமது அஸ்திரத்தை எடுத்துக் காட்டினார். திவ்யமாகவும் பயங்கரமாகவும் ஒருங்கே தோன்றிய அந்த அஸ்திரத்திற்காகத் தான் அர்ஜுனன் கடுந்தவம் செய்து சிவபெருமானோடு சண்டை செய்யவும் நேர்ந்தது. 'இது கிடைத்தால் கர்ணனை அழிப்பது பெரிதன்று; பீஷ்மரையும் துரோணரையும்வெல்வதும் இயலாத காரியமன்று' என்று எண்ணினான் அர்ஜுனன்.

சிவபெருமான் அந்த அஸ்திரத்தை அவனிடம் ஒப்புவித்து, "அர்ஜுனா! இதை நீ அவசரப்பட்டுப் பிரயோகித்து விடலாகாது. சாமானிய வலிமையுள்ளவனை நோக்கிச் செலுத்தினால் ஜகத்தையே அழித்துவிடும்!" என்று எச்சரித்தார். அர்ஜுனன் அதைப்பெற்றுக்கொண்ட நிமிஷத்தில் பூமி அசைவது போலத்தோன்றியது; ஆயிரக் கணக்கான இடிகள் கர்ஜிப்பது போலவும் தோன்றியது. 'யுக

முடிவோ?' என்று அதிசயித்த அர்ஜுனன் கண் மூடிக் கண் திறப்பதற்குள் சிவபெருமான் மறைந்து விட்டார். மேற்கே சூரியன் மறைவது போல வான மண்டலம் ஒரு கணம் வெகு விசித்திரமாக ஒளிர்ந்தது.

சிவபெருமான் மறைந்த பிறகு இந்திரன், வருணன், குபேரன், யமன் முதலான தேவர்களும் பிரத்தியட்சமாகி அர்ஜுனனுக்குப் பலவேறு அஸ்திரங்களைக் கொடுத்தார்கள். பிறகு இந்திரன் விருப்பத்திற்கு இணங்க, ஒரு திவ்ய ரதத்திலே அர்ஜுனன் தேவலோகத்துக்குப் போனான். இந்திரன் இவனைச் சரி நிகர்சமானமாகத் தன் சிங்காதனத்திலே தன்னுடன் வீற்றிருக்கச் செய்தான்.

**ஊர்வசி சாபம்**

தேவ போகங்களைக் கொண்டு அர்ஜுனன் உள்ளத்தைக் களிப்பிக்க முயன்றான். அர்ஜுன புத்தியோ அவற்றை இகழ்ந்து தேவ லோகத்திலும் அஸ்திர சஸ்திரப் பயிற்சியையே நாடியது; மோசமான சூதாட்டத்தில் உடைமைகளை இழந்து காட்டிலே கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த சகோதரர்களையும், தேவியையும் நினைத்துக்கொண்டிருந்தது. துரியோதனாதியர்களை நினைத்துப் பார்த்ததும் கோபாவேசம் கொண்டது.

அச்சமயம் கீதவாத்திய விநோதங்களுக்கிடையே ஊர்வசி நடனமாடிக்கொண்டிருந்தாள். ஒப்பற்ற கீதம்; ஒப்பற்ற நர்த்தனம். மனத்தில் சுகமில்லாமலே அன்னையாகிய குந்தியையும், மனைவியாகிய பாஞ்சாலியையும் நினைத்துக்கொண்டே அர்ஜுனன் ஊர்வசியின் அபிநயங்களைப் பார்த்துக்கொண்டிருந்தான். ஊர்வசியின் பார்வையோ பிரேமையுடன் அர்ஜுனன் மீது விழுந்தது.

ஊர்வசி சமயம் பார்த்துத் தன் காதலை அர்ஜுனனிடம் தெரிவித்தாள். அவளுடைய நோக்கும், புருவ அசைவுகளும், முக சந்திரனும் வாய்ப்பேச்சைப் பூர்த்தி செய்தன. எனினும் அர்ஜுனன் கொஞ்சமும் கலங்கவில்லை. அவனுடைய உள்ளம் கௌரவர்களுடைய நாசத்தையும் பாண்டவர்களின் கஷ்டங்களையுமே சிந்தித்துக் கொண்டிருந்தது.

அர்ஜுனன் ஊர்வசியை நமஸ்கரித்தான். "நீ எனக்கு அன்னை குந்தி போன்றவள். ஓ, அப்ஸரஸே! நீ எங்கள் வம்சத்திற்கே தாய்" என்றான். ஊர்வசியோ காதலாலும், கோபத்தாலும் துடித்து அர்ஜுனனைச் சபித்தாள். 'நீ பேடிபோலத் திரிவாய்' என்றாள்.

———★———





தொழிலாளர் க்ஷேமாபிவிருத்தி ஸ்தாபனங்களின் நிர்வாகப் பயிற்சிக்காக பம்பாய், ஐக்கிய மாகாணம், சென்னை ஆகிய விடங்களிலிருந்து இந்திய சர்க்கார் பிரிட்டனுக்குப் பிரதிநிதிகளை அனுப்பியிருந்தனர். அவர்கள் இப்போது இந்தியா திரும்பிவிட்டனர். பம்பாய் வந்தபோது எடுத்த படம்தான் மேலே தோன்றுகிறது. காப்டன் ரஞ்சித் சிங், டாக்டர் மிஸ் ஸர்குண (சென்னை) ஸ்ரீ காளே முதலியவர்களைப் படத்தில் காணலாம். (பி. பி. ஏ)



சுவை நிரம்பியது

சுலபமாய் ஜீரணமாகிறது

சத்துமானது

விடமின் அடங்கியது



**டால்டாவில் வறுத்த பூரிகள் வாயில் கரைகின்றன—மேலும் ஊக்கத்தையும் அளிக்கின்றன!**

டால்டா உங்கள் தின்பண்டங்களை ருசியுள்ளதாகச் செய்யும் வஸ்துமட்டுமன்று—அதுவே ஊக்கமளிக்கும் உணவு! எளிதில் ஜீரணமாகக் கூடியதும், விடமின் நிரம்பியதுமான இச் சமையல் செய்ய உதவும் சாதனத்தின் அறிந்த சத்தையளிக்கும் திறமையைக்கொண்டு உங்கள் தினந்தோறுமுள்ள சாப்பாட்டைச் சீர்படுத்திக் கொள்ளுங்கள். டால்டா ஒவ்வொரு ஸ்திரீக்கும் ஒரு நன்கொடை—அது அவர் தயாரிக்கும் சாதாரண தின்பண்டங்களுக்கு விசேஷச் சுவையையளிப்பதோடு அவர் குடும்பத்திற்கு அதிகப்படியான ஊக்கத்தையும் கொடுக்கிறது.

★ஆங்கிலத்தில் மட்டும் எழுதப்பட்டுள்ள டால்டா சமையல் புத்தகத்தின் உதவியுடன் உங்கள் சாப்பாட்டுத் திட்டத்தை அமையுங்கள்; சத்தைத் தரும் திறமைக்கென ஆராய்ந்தெடுத்த சுவையுள்ள 150-க்கு மேற்பட்ட இந்தியத் தின்பண்டங்களைப் பக்குவம் செய்யும் முறைகள் இதில் அடங்கியிருக்கின்றன. உங்கள் புத்தகத்திற்கு Dept. A463 P.O. Box No. 353, Bombay, என்ற விலாசத்திற்கு நான்கு அணா ஸ்டாம்பு அனுப்புங்கள்.

HVM. 48-50 TM THE HINDUSTAN VANASPATI MANUFACTURING CO., LTD.

— உங்கள் முக வசீகரத்திற்கு —

# "நிக்கோ" ஸ்னோ

நேஷனல் இண்டஸ்டிரியல் கம்பெனி, கும்பகோணம்.

# இளமையின் ரகசியம்.



அகாலத்தில் முதுமை உணர்ச்சியிருந்தால் நிபுணரான டாக்டர் நாருவின் ஆலோசனை பெறுங்கள். உங்களைப் புதிய மனிதராக்குவார். குணமடைந்தவர்களில் ஒருவரது அத்தாட்சி.

"நான் பலஹீனம், நரம்புத் தளர்ச்சிக்கு டாக்டர் நாருவிடம் மருந்து சாப்பிட்டேன். தற்போது பூரணமாக இளமையும், ஜீவசக்தியும் பெற்றிருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவிக்கின்றேன்."

ஏ. அய்யஸ்னர்,

வெட்டப்பாளையம்.

டாக்டர் நாரு,

(ஸெக்ஸாலஜிஸ்ட்)

**நாரு ஆஸ்பத்திரி,**

**24, பிராட்வே, மதராஸ்.**

நேரம்:

காலை 8-மணி முதல் 12-வரை

மாலை 4-மணிமுதல் 8-வரை

ஞாயிற்றுக்கிழமைகளிலும், விடுமுறை நாட்களிலும் காலை 8-மணிமுதல் 12-மட்டும். மாலையில் கிடையாது.

இரகசியமான வைத்தியம். பதிலுக்கு ஸ்டாம்பு அனுப்பவும்.

"அழகையளிக்கும் உத்தமமான சோப் லக்ஸ் டாய்லட்"
என்கிருர் உளர்மிளா தேவி

LUX TOILET SOAP

சினிமா நட்சத்திரங்கள் விரும்பும் அழகையளிக்கும் சோப்!

LTS. 143-111-40 TM LEVER BROTHERS (INDIA) LIMITED

ஸ்ரீ V. S. பதி விலாஸ்

மீனம்பாளயம் துண்டுபுகையிலை

காரம், மனம், குணம், பொருந்திய புகையிலையை உபயோகியுங்கள்

ரிஜிஸ்டர் NO. 110015

ஏஜெண்டுகள் தேவை:–

K. காளியப்பகவுண்டர்

புகையிலை வியாபாரம்... கோபிசெட்டிபாளயம்.

தற்கால உணவு வறுமையைத் தவிர்க்க

## எம்பயர் சேமியாவே

உங்களுக்கு ஆதரவளித்து போஷிக்கும்




சேமியா இட்லி, உப்புமா, கிச்சடி, பிரிஞ்ச், பாத் முதலியன தயாரிக்கலாம்.

எம்பயர் வர்மிஸில்லி கம்பெனி,
(ஸ்தாபிதம்: 1919.)
மதராஸ் 7.

ஒரு மணியில் வாலிபம்

## காமபிந்து

(ரிஜிஸ்டர்ட்)

நீற்றுப்போன தாதுவைக் கெட்டிப் படுத்தியும், அதிகப்படுத்தியும், சப்த நரம்புகளுக்கு முறுக்கேற்றி இல்லற சுகத்தை இஷ்டம்போல் அனுபவிக்கச் செய்யும், 30 மாத்திரை விலை ரூ. 3, 60 மாத்திரை ரூ. 5-8-0,

Dr. N. V. R. கோபாலன், M.D.(H)
The K. B. Pharmacy, (Regd)
(ஸ்தாபிதம் : 1919)
103, ஐஸ் ஹவுஸ் ரோடு,
திருவல்லிக்கேணி, மதராஸ்

வியாபாரிகளுக்கு தகுந்த சான்ஸ்
வெற்றி இந்தியாவில் தயார் ஆகும்
ரிஜிஸ்டர்

## இண்டான் பில்ஸ்

ஜலிப்பு, இருமல், அஜீர்ணம் முதலியவைகளை விரட்டும் தாம்பூல மாத்திரைகள்.

| | | |
|---|---|---|
| 20 மாத்திரைகள்கொண்ட சாம்பிள் | பாகட் 1-க்கு | 0 1 0 |
| 20 ,, | 100-க்கு | 5 4 0 |
| 20 ,, | 500-க்கு | 25 0 0 |
| 20 ,, | 1000-க்கு | 45 0 0 |
| லூஸ் பில்ஸ் (Loose Pills) 1000-கொண்ட டின் | 1-க்கு | 2 8 0 |

மேற்கண்ட விலைகளுக்கு தபால் சார்ஜ் இலவசமாக V. P.-யில் அனுப்பப்படும்.

தேவைக்கு எழுதுங்கள்; ஆர்டர்கள் உடன் கவனிக்கப்படும்.

தயாரிப்பவர்:
ஏ. ஜி. நாயர் அண்டு கோ.,
89, பெரம்பூர் பாரக்ஸ் ரோட், வேப்பேரி
மதராஸ்.

## பெப்ஸ் தவருமல் உட்கொண்டு இருமல், ஜளிப்பு மார்பு கோளாறுகளை ஒழியுங்கள்.



கடுமையான இருமல் சுவாச காசம் அல்லது மார்புக் கோளாறுகளால் அவதிப்படாதீர்கள். எப்பொழுதும் பெப்ஸ் கிருமிநாச சுவாச மாத்திரைகளை கைவசம் வைத்திருங்கள்.

பெப்ஸ் வாயில் கரைந்தவுடன் எற்படும் மருந்து பூர்வமான ஆவி, சுவாசத்துடன் கலந்து, சுவாசப்பைக்குச் செல்லுகின்றது. இருமலால்புண்பட்ட சுவாசகுழாய்களுக்கு சமனமூட்டி, குணப்படுத்தும். தொண்டை கரகரப்பு, மார்பு பலஹீனம் முதலியவற்றைப் போக்கும். ஜளிப்பு, இன்புளூயென்ஸா, எல்லாவித இருமலுக்கும் பெப்ஸ் உயரிய நிவாரணி. எல்லா மருந்து வியாபாரிகளும் பெப்ஸ் ரூ. 1 விதம் விற்கின்றனா. எஜண்டுகள் : மேஸர்ஸ் தாதா அண்டு கம்பெனி, பி. டி., மதராஸ்.




எப்பொழுதும் பெப்ஸ் உட்கொள்க.

# PEPS

கிருமிநாச சுவாச மாத்திரைகள்.






லோத்ரா பல்லாண்டுகளாக இந்திய ஸ்திரீகளுக்கு விசுவாசத்துடன் சேவைபுரிந்து நம்பிக்கையுள்ள கர்ப்பாசய ரோக நிவாரணி என்று புகழையும் ஸ்தாபித்துக் கொண்டுள்ளது.

லோத்ரா கவர்ச்சி மிக்க ஆரோக்கியத்தையும் சக்தியையும் அளிக்கிறது.

EASTERNS 378.

**கேசரிகுடீரம் லிட்., மதராஸ்.**

ஒரிஸ்ஸா, நைஜாம் ஆந்திரா ஜில்லாக்களுக்கும் தமிழ் நாட்டுக்கும் எஜண்டுகள்:

**ஸீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்,**

பர்ஹாம்பூர்-செகந்திராபாத் - பெஜவாடா மதுரை.

## ஹர்னியா விரைவாதத்துக்கு நிச்சய நிவாரணி.

நவீன மின்சார முறைப்படி பத்திரமான சிகிச்சை. இது தபாலில் அனுப்புவதாக விளம்பரப்படுத்தும் மருந்தல்ல. நோயாளிகள் நேரில் வந்து சிகிச்சைபெற்று பூரண திருப்தியடையலாம். சிகிச்சை பயனற்றது என்று நிரூபிக்கும் எந்த டாக்டருக்கும் நபருக்கும் ரூ. 500 பரிசு அளிக்கப்படும். பதில் எழுத தபால் ஸ்டாம்பு அனுப்புவது அவசியம்.

**டாக்டர் சூர்யநாராயண ராவ் (ஸ்பெஷலிஸ்ட்)**

எலக்டிரோ-கிளினிக், 186, ராயப்பேட்டை ஹைரோடு,

ராயப்பேட்டை, மதராஸ்.

## DEAFNESS

Partial or total---complicated with head noises and other troubles---how long and what causes, treated radically in four weeks by our safe, sure, world-wide reputed and tested Herbal home-treatment. Guaranteed cent per cent success. Particulars on request.

**KAMALA WORKS S-8, PANCHPOTA, BENGAL.**



வேலூரில் ஒரு பழைய கள்ளுக்கடை அருகே ஏழை சிறுவர்களுக்கு விவசாய மந்திரி ஸ்ரீ குமாரஸ்வாமி ராஜா பானகம் வழங்குகிருர்.



(கீழ் இடது)

திங்களன்று கோகலே ஹாலில் மேற்படி மகாநாடு "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஸ்ரீ ஸி. ஆர். ஸ்ரீனிவாஸன் தலைமையில் நடந்தது. ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் நடவடிக்கைகளை ஆரம்பித்து வைத்தார்.



(கீழ் வலது)

பண்டித நேரு சமீபத்தில் பத்திரிகைப் பிரதிநிதிகள் மகாநாட்டில் இந்திய சர்க்காரின் அயல்நாட்டுக் கொள்கையை விளக்கியபோது எடுத்த படம்.





Printed and published by S. Chakrapani Iyengar, at the SWADESAMITRAN Power Press 3 & 4 Whites Road, Mount Road, Madras. Editor. C. R. Srinivasan, B. A.